# எட்டுத்தொகைச் செல்வம்

பேராசிரியர் லெ.ப.கரு. இராமநாதன் செட்டியார்

# எட்டுத்தொகைச் செல்வம்

பேராசிரியர்

**லெ.ப.கரு.இராமநாதன் செட்டியார்**

முத்தையா நிலையம்

477, பூந்தமல்லி நெடுஞ்சாலை

பிளவர்ஸ் சாலை அஞ்சல்

சென்னை — 600084

# முன்னுரை

தமிழ் மொழியில் இப்போது கிடைத்திருக்கும் இலக்கியங்களுள், எட்டுத்தொகையும், பத்துப்பாட்டும் மிகப் பழமையானவை. இவை, இற்றைக்கு ஆயிரத்து எண்ணூறு ஆண்டுகளுக்கு முற்பட்டவை. இவற்றுள், பத்துப்பாட்டின் கருத்து வளங்களைக் கொண்ட பத்துப் பாட்டு வளம் என்னும் பெயர் உடைய எனது நூல், 1968 ஆம் ஆண்டில் வெளிவந்தது. இந் நூலில், எட்டுத் தொகை நூல்களின் கருத்துச் செல்வங்கள், எடுத்துரைக்கப் பெற்றுள்ளன. ஆதலால், இந் நூலிற்கு எட்டுத் தொகைச் செல்வம் எனப் பெயரிடப் பெற்றது. இந் நூலில், எட்டுத்தொகை நூல்கள் பற்றிய பொதுச் செய்திகளும், ஒவ்வொரு தொகை நூலிலும் காணப்பெறும் அமைப்பு முறை, சிறப்பியல்பு, பொருள் நலம் முதலியனவும் கூறப் பெற்றுள்ளன. பண்டைத் தமிழ் மக்களுடைய அகவாழ்வு புறவாழ்வுகளின் உயர்ந்த நோக்கங்களை, இந் நூலினால், ஓரளவு அறியலாம். இந் நூலினை அறிஞர்கள், அன்புடன் வரவேற்பார்கள் என்று நம்புகிறேன்.

சென்னை,
27—12—1973

லெ. ப. கரு. இராமநாதன்

# உள்ளுறை

# எட்டுத்தொகைச் செல்வம்

★

## 1. எட்டுத்தொகை பற்றிய பொதுச் செய்திகள்

தமிழ் மொழியில், இப்போது கிடைத்திருக்கும் நூல்களில், மிகப் பழமையானவை, தொல்காப்பியம் என்னும் இலக்கண நூலும், தொகை நூல்கள் என்று கூறப்படும் இலக்கிய நூல்களுமேயாகும். இத் தொகை நூல்கள், எட்டுத்தொகை, பத்துப் பாட்டு என இரு வகைப்படும். இவை, சங்க இலக்கியம் என்று கூறப் பெறும். இற்றைக்கு ஆயிரத்து எண்ணூறு ஆண்டுகளுக்கு முற்பட்ட சங்க காலப் புலவர் பெருமக்கள் பலரால் இயற்றப் பெற்ற செய்யுட்களுள் சிறந்தவை, இந் நூல்களில் தொகுக்கப் பெற்றுள்ளன. இந்திய நாட்டில், பேச்சு வழக்கில் உள்ள மொழிகளின் இலக்கியங்களுள், மிகப் பழமையானவை, இவைகளேயாகும். பழங்காலத் தமிழ் மக்களின் வாழ்வியலையும், உயர்ந்த பண்பாடுகளையும் அறிதற்கு இவை உதவுகின்றன.

சங்க இலக்கியங்களுள், எட்டுத்தொகை என்பது, தொகை நூல்கள் எட்டினைக் கொண்ட தொகுப்பின் பெயராகும். இவ் எட்டுத்தொகை, தொகை எனவும் பெயர் வழங்கப் பெறும்.[1] இதன்கண் அடங்கியுள்ள நூல்கள் எட்டின் பெயர்களாவன :— அகநானூறு, நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, பரிபாடல், பதிற்றுப் பத்து, புறநானூறு என்பனவாம். இவ் எட்டுத் தொகை, எண் பெருந்தொகை என்றும், எண் கோவை என்றும் வழங்கவும் பெறும் என்பர்.

இத் தொகை நூல்கள், எட்டுத்தொகை எனத் தொல்காப்பியத்தில், பேராசிரியர் உரையில்[2] கூறப் படுவதிலிருந்து இவ் வழக்கம், பழமையானது என்பது தெரிகின்றது. இவ் எட்டுத் தொகையில் அடங்கிய தொகை நூல்களின் தனிப் பெயர்களும் இறையனார் களவியல் உரை, தொல்காப்பியத்து இளம்பூரணர் உரை முதலியவற்றில் வழங்கப்பட் டுள்ளன. இத் தொகை நூல்களைக் குறிப்பிடும் போது, பேராசிரியர், நச்சினார்க்கினியர் ஆகிய உரை யாசிரியர்கள் இருவரும் தம் உரைகளில், "நெடுந் தொகை முதலாகிய தொகை எட்டும்" என்று குறிப் பிட்டுள்ளனர்.[3] இதனால் இவ் உரையாசிரியர்கள்

---

1. தொல்காப்பியம், பொருளதிகாரம், செய்யுளியல், நூற்பா, 50, பேராசிரியர் உரை.
2. தொல்காப்பியம், பொருளதிகாரம், செய்யுளியல், நூற்பா, 236, உரை.
3. தொல்காப்பியம், பொருளதிகாரம், செய்யுளியல், நூற்பா, 236, உரை.

காலத்தில், எட்டுத்தொகை நூல்கள், நெடுந் தொகை என்னும் அகநானூறு முதலாக வைத்து எண்ணப்பட்டன என்பது தோன்றுகின்றது. ஆனால், பிற்காலத்தில், இவை, நற்றிணை முதலாக வைத்து எண்ணப்பட்டுள்ளன.

இத் தொகை நூல்கள் எட்டும் பொருளினாலும், செய்யுள் வகையினாலும், அடி அளவினாலும் தொகுக்கப் பெற்றன. இவற்றுள், அகநானூறு, நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை என்னும் நூல்கள் ஐந்தும் அகப்பொருளாகிய இன்பத்துறை பற்றிய ஒழுக்கங்களை எடுத்துக் கூறுவன. பதிற்றுப்பத்து, புறநானூறு ஆகிய நூல்கள் இரண்டும் புறப்பொருள் பற்றிய செய்திகளைப் புலப் படுத்துவன. பரிபாடல் என்னும் நூல், அகப் பொருள், புறப்பொருள் என்னும் இரண்டனையும் கூறுவது. இவ் எட்டுத்தொகை நூல்களில் உள்ள செய்யுட்கள், பா வகைகளுள், ஆசிரியப்பா, பரி பாடல்பா, கலிப்பா என்னும் மூன்றுவகையுள் அடங் கும். ஆயினும், புறநானூற்றில் உள்ள "தொடி யுடைய தோள் மணந்தனன்"[1] என்று தொடங்கும் செய்யுள், வஞ்சிப்பாவாகக் காணப்படுகின்றது. அந் நூலில், மேலும் சில செய்யுட்களும் ஆசிரிய அடி கலந்த வஞ்சிப்பாக்களாக உள்ளன. எட்டுத்தொகை நூல்களில், சில செய்யுட்கள் கிடைக்கவில்லை. சில செய்யுட்கள், அடிகள் சிதைந்தும், சில செய்யுட் கள், சொற்கள் சிதைந்தும் காணப்படுகின்றன.

1. புறநானூறு, செய்யுள், 239.

## பிற மொழித் தொகை நூல்கள்

பலரால் இயற்றப் பெற்ற செய்யுட்களைக் கொண்டு, ஏறத்தாழ, கி.மு. 60ல் தொகுக்கப் பெற்ற அந்தாலஜி (Anthology) என்று கூறப்படும் தொகை நூல், கிரேக்க மொழியில் இருப்பது, இங்கு நினைக்கத் தக்கது. இத் தொகை நூல், மிலீகர் என்பவரால், முதலில் தொகுக்கப் பெற்றது. இதுவும், தமிழ் மொழியில் உள்ள தொகை நூல்களும் பழமையிலும், பொருள் அமைதியிலும், செய்யுள் நயத்திலும், பழைய பண்பாடுகள், வழக்க ஒழுக்கங்கள் ஆகியவற்றைப் புலப்படுத்துவதிலும் ஒத்த இயல்பின என்பர்.[1] இவ்வாறு, இரு வேறு மொழிகளின் இலக்கிய அமைப்பு, மிகப் பழங்காலத்திலேயே ஒத்திருத்தலை எண்ணும்போது, இலக்கிய அறிவும், இலக்கிய ஆக்கமும் நாடு, மொழி முதலிய வேறுபாடுகளைக் கடந்த ஒருமைப்பாடு உடையன என்பது, அறிதற்குரியதாகும். வடமொழியில் இப்போது கிடைத்திருக்கும் தொகை நூல்களுள், காலத்தால் முற்பட்டது, கவீந்த்ர வசன ஸமுச்சயம் என்னும் தொகை நூலாகும். இது, கி. பி. பதினொன்றாம் நூற்றாண்டிற்கு முற்பட்ட கவிஞர்களின் செய்யுட்களைக் கொண்டது என்பர்.

## பிற்காலத் தொகை நூல்கள்

நாலடியாராகிய நீதி பற்றிய தொகை நூலும், ஒன்பதாம் திருமுறை, இயற்பா முதலிய, கடவுள்

---

1. இலக்கிய மணிமாலை, பக்கம் 7, 8.

நெறி பற்றிய தொகை நூல்களும், சிவப்பிரகாசப் பெருந்திரட்டு முதலிய, தத்துவ நெறி பற்றிய தொகை நூல்களும், பல நூல்களிலிருந்து தொகுக்கப் பெற்ற செய்யுட்களைக் கொண்ட புறத் திரட்டு முதலிய தொகை நூல்களும் தனிச் செய்யுட்களின் தொகுப்பாகிய தமிழ் நாவலர் சரிதை, தனிப் பாடல் திரட்டு, தனிச் செய்யுட் சிந்தாமணி முதலிய, பல பொருள் பற்றிய தொகை நூல்களும், வண்ணத் திரட்டு, கோவைக் கொத்து முதலியனவும் சங்க காலத் தொகை நூல்களைப் பின்பற்றிப் பிற்காலத் தில், பல்வேறு வகையில் தோன்றியனவாகும். பலர் இயற்றிய செய்யுட்களைக் கொண்ட இலக்கியத் தொகை நூல்களேயன்றிப் பலரால் இயற்றப்பட்ட நூற்பாக்களைக் கொண்ட பன்னிரு பாட்டியலும், பலரால் இயற்றப்பட்ட படலங்களைக் கொண்ட பன்னிரு படலமும் என, இலக்கணத் தொகை நூல்கள் இரண்டு இருப்பதும் குறிப்பிடத் தக்கதாகும்.

### தொகை நூற் செய்யுட்களின் எண் அளவு

எட்டுத்தொகையுள், பரிபாடலும். கலித் தொகையும் அல்லாத பிற தொகை நூல்களின் செய்யுட்கள், ஐந்நூறு, நானூறு, நூறு என்னும் முழுப் பேரெண்களுள் ஏதேனும் ஒன்றின் அளவின வாகத் தொகுக்கப்பட்டுள்ளன. இதனை நினைக்கும் போது, பல இடங்களில் பல காலங்களில் இருந்த புலவர் பெருமக்களால் இயற்றப்பட்ட செய்யுட்களி லிருந்து ஒரு பேரெண் அளவிற்குத் தேர்ந்தெடுக்கப் பெற்று, இத் தொகை நூற் செய்யுட்கள் தொகுக்கப்

பட்டிருக்கலாம் என்பது தோன்றுகிறது. இவற்றுள், பரிபாடலிலும், கலித்தொகையிலும் உள்ள செய்யுட்கள், நூறு என்னும் வகையைச் சேர்ந்த ஒரு முழுப் பேரெண் அளவினவாக இல்லாமல், எழுபதும் நூற்றைம்பதுமாக அமைந்துள்ளன.[1] இதனை எண்ணும்போது, இவ் இரு வகையிலும் அக்காலத்துக் கிடைத்த செய்யுட்களில், தேர்ந்தெடுத்தற்கு உரிய செய்யுட்கள், மற்றையன போல, நூறு என்னும் முழுப் பேரெண் அளவிற்குக் கிடைக்கப் பெறவில்லை என்பதும், கிடைத்தனவற்றிலிருந்து கிடைத்த அளவை அடுத்த ஒரு முழு எண் அளவில் தொகுத்தனர் என்பதும் தோன்றுகின்றன.

மேற் கூறியவாறு, பரிபாடலும், கலித்தொகையும் அல்லாத தொகை நூல்களில் உள்ள செய்யுட்கள், ஐந்நூறு, நானூறு, நூறு என்னும் எண்களில் அடங்குகின்றன. ஐங்குறுநூற்றிலும், பதிற்றுப்பத்திலும் உட்பிரிவுகளில் உள்ள செய்யுட்கள், பத்து என்னும் எண் அளவினவாகக் காணப்படுகின்றன. திருக்குறளின் அதிகாரங்கள் ஒவ்வொன்றும் பத்துச் செய்யுட்களைக் கொண்டிருப்பதும் இங்கு நினைக்கத் தக்கது. இவற்றை நோக்கும் போது, பத்து, நூறு, என்னும் எண் ஒருமைப் பாட்டில், நம் முன்னோர்கள், ஓர் அழகும், பொருத்தமும் கண்டனர் என்று கருதலாம். இவற்றுள்ளும்

1. பரிபாடலில், 70 செய்யுட்களும், கலித்தொகையில், 150 செய்யுட்களும் உள்ளன.

தொகை நூல்கள் நான்கில் உள்ள செய்யுட்கள், நானூறு என்னும் எண் உடையனவாக இருப்பதை எண்ணும்போது, நூறு என்னும் பேரெண் வகையி னுள்ளும் நானூறு என்னும் எண்ணினை மிகுதியாக விரும்பினர் என்றும் கருதலாம்.[1] பின்னர்த் தோன் றிய நாலடி நானூறு என்னும் தொகுப்பு நூல், இம் முறையைப் பின்பற்றியது என்று கொள்ளலாம்.

## தொகை நூற் செய்யுட்களின் எண் அளவு, பிற்கால இலக்கியங்களில் பின்பற்றப்பட்டமை

பிற்கால நூலாசிரியர்கள், தாம் இயற்றிய நூல் களின் செய்யுள் எண் அளவினை, இத் தொகை நூற் செய்யுட்களின் எண் அளவினைப் பின்பற்றி அமைத் திருப்பது நினைக்கத் தக்கது. பழமொழி நானூறு, அகப்பொருட் கோவைகள் முதலிய நூல்கள், நானூறு செய்யுட்களை உடையனவாக இருப்பது, அகநானூறு, நற்றிணை, குறுந்தொகை, புறநானூறு ஆகியவற்றைப் பின்பற்றியது என்று கருதலாம். நூறு செய்யுட்களைக் கொண்டனவாக அமைந்த பிள்ளைத்தமிழ், கலம்பகம், அந்தாதி முதலியன,

---

1. பிற்காலத்தில் தோன்றிய இனியவை நாற்பது, கார் நாற்பது முதலிய நூல்கள், தனித்தனி நாற்பது செய்யுட் களாக உள்ளன. நாலாயிர திவ்வியப் பிரபந்தம் என் னும் நூல், நாலாயிரம் என்னும் பெயருடன் அமைந்துள் ளது. இவை, அகநானூறு முதலிய சங்க நூல்களில் உள்ள செய்யுட்களின் நானூறு என்னும் எண்ணில், பிற்காலத் தோர் ஈடுபட்டதன் பயனாக விளைந்த சுருக்கமும் பெருக்கமு மான எண் அளவுகளாகும் என நினைக்கலாம்.

பதிற்றுப்பத்தினைப் பின்பற்றியனவாக நினைக்கலாம். ஐந்திணை எழுபது, ஈட்டி எழுபது, ஏர் எழுபது முதலிய நூல்களை, எழுபது செய்யுட்களில் அமைத்திருப்பது, பரிபாடல் செய்யுள் எண்ணினைப் பின்பற்றியது எனவும், திணைமாலை நூற்றைம்பது என, நூற்றைம்பது செய்யுட்களில் நூலினை இயற்றியது, கலித்தொகைச் செய்யுட்களின் எண் அளவினைப் பின்பற்றியது எனவும் கருதலாம். தேவாரம், திவ்வியப் பிரபந்தம், திருவாசகம் முதலிய நூல்களில், பத்துச் செய்யுட்களைக் கொண்ட உட்பிரிவுகள் இருப்பதும், இவற்றுள் திருவாசகத்தின் உட்பிரிவுகளின் பெயர்களில், பத்து என்னும் எண்ணுப் பெயரும் சேர்ந்திருப்பதும் ஐங்குறுநூற்றிலும், பதிற்றுப்பத்திலும் உள்ள உட்பிரிவுகளைப் பின்பற்றியன என்று கொள்ளலாம்.[1]

## பாடினோர்

எட்டுத்தொகையில் உள்ள செய்யுட்களை இயற்றிய புலவர்கள், ஏறத்தாழ ஐந்நூற்றுவர் ஆவர். இவர்களுள், ஒரே செய்யுளை இயற்றியவர் பலர். ஏனையோர், சிலவும் பலவுமாகிய செய்யுட்களை இயற்றியுள்ளனர். ஒன்றிற்கு மேற்பட்ட செய்யுட்களை இயற்றியவர்கள், தொகைநூல் ஒன்றில் உள்ள

---

1. நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தில் உள்ள திருவாய்மொழியில், பத்து என்னும் எண்ணுப் பெயர் இருப்பினும் அது, பத்துப் பத்துக்களைக் கொண்ட நூறு செய்யுட்களுக்குப்பெயராக அமைந்திருக்கும் வேறுபாடு, நினைக்கத்தக்கது.

செய்யுட்களை இயற்றியவரும், தொகை நூல்கள் பல வற்றில் உள்ள செய்யுட்களை இயற்றியவருமாகக் காணப்படுகின்றனர்.

இப் புலவர்கள், தமிழகத்துப் பல ஊர்களைச் சேர்ந்தவர்கள்; பரந்துபட்ட காலத்தினர்; பல்வேறு தொழிலினர். இவருள், சேரர், பாண்டியர், சோழர் என்ற முடியுடைப் பெருவேந்தரும், அரசமாதேவி யரும் இடம் பெற்றுள்ளனர். அன்றியும், சிற்றர சரும், அவர்தம் மகளிரும், அந்தணர், வணிகர், வேளாளர், ஆயர், மறவர், குறவர் முதலாயினோரும், பிற நாட்டினரும் உள்ளனர்.

பெண்பாற் புலவருள், முன்பு குறிக்கப் பெற்ற அரசமாதேவியரும், சிற்றரசர் மகளிரும் அன்றிக் குறத்தி வேட்டுவச்சி முதலாய பல இனப் பெண் டிரும் செய்யுள் இயற்றியுள்ளனர். இவர்களின் தொகை, ஐம்பதிற்கு மேல் இருக்கலாம் என்பர்.[1] எனவே, முற்காலத்தில், ஆடவரேயன்றி மகளிரும் சீரிய புலமை பெற்றுத் திறமையுற்று மதிக்கப்பெற் றமை, எண்ணி மகிழத் தக்கதாகும். சங்க காலத் தமி ழகத்தில், இத்துணைப் பெண்டிர் புலமை பெற்றிருந் தாற் போல, அதே காலத்தில், வேறு எந்நாட்டிலும், எம்மொழியிலும் இத்துணைப் பெண்டிர் செய்யுள் இயற்றும் ஆற்றல் பெற்றிருந்தனர் என்று கூறத் தகும் சான்றுகள் இருப்பதாகத் தெரியவில்லை.

---

1. சங்கத் தமிழும், பிற்காலத் தமிழும் பக்கம், 79.

## பாடினோர் பெயர் அமைப்பு

எட்டுத்தொகைச் செய்யுட்களை இயற்றிய புலவர்களில், பலருடைய இயற்பெயர்கள் தெரிகின்றன. இவர்களில் சிலர், தம் செய்யுட்களில் தாம் எடுத்தாண்ட தொடர்களுடன் தம் இயற்பெயர் சேர்த்தும்[1] வேறு சிலர், தம் செய்யுட்களில் தாம் கூறிய பொருளுடன் தம் இயற்பெயர் சேர்த்தும்[2] பெயர் வழங்கப் பெற்றுள்ளனர். மற்றுஞ் சிலர், இயற்பெயர் இன்றித் தம் செய்யுட்களில் உள்ள தொடர்களைக் கொண்டே பெயர் கூறப் பெற்றுள்ளனர்.[3] பத்துப்பாட்டினுள் ஒன்றாகிய மதுரைக் காஞ்சியினை இயற்றிய மாங்குடி மருதனார் என்னும் புலவர், இப் பாட்டினை இயற்றிய சிறப்பினால், மதுரைக் காஞ்சிப் புலவர் என்றும், காஞ்சிப் புலவர் என்றும் பெயர் வழங்கப் பெற்றார் எனவும், அகநானூற்றில், "தெறுகதிர் ஞாயிறு" (89) என்று தொடங்கும் செய்யுளை இயற்றியவராகக் குறிப்பிடப்

---

1. இம்மென்கீரனார் (அகநானூறு, செய்யுள், 398.) விழிக்கட் பேதைப் பெருங்கண்ணனார். (நற்றிணை, செய்யுள், 242.)

2. மடல் பாடிய மாதங்கீரனார் (குறுந்தொகை, செய்யுள், 182; நற்றிணை, செய்யுள், 377.) வெறி பாடிய காமக் கண்ணியார் (அகநானூறு, செய்யுள், 22, 98; நற்றிணை, செய்யுள், 268).

3. தேய்புரிப் பழங் கயிற்றினார் (நற்றிணை, செய்யுள், 284.) தொடித்தலை விழுத் தண்டினார் (புறநானூறு, செய்யுள், 243.)

பட்டுள்ள மதுரைக் காஞ்சிப் புலவர் இவரே எனவும் கூறுவர். உறுப்பு, ஊர், குலம், தொழில் முதலியவை காரணமாகப் பெயர் பெற்ற புலவர்களும் உள்ளனர். மேலும், புலவர் சிலருக்கு அவர்களின் இயற்பெயர், காரணப் பெயர் இரண்டனுள் ஒன்றேனும் தெரியவில்லை.

புலவர்களுக்கு அவர்கள் எடுத்துக் கூறிய சிறந்த தொடர்கள், சிறப்புப் பெயர்களாக அமைந்தது போலச் செய்யுட்களுக்கு அவற்றில் வந்துள்ள சிறந்த தொடர்கள், பெயர்களாகக் கூறப்பட்டிருத்தல், பதிற்றுப்பத்தில் காணப்படுகின்றது. பத்துப்பாட்டில் உள்ள மலைபடு கடாமும் இவ்வாறு பெயர் பெற்றதேயாம். மேலும், செய்யுட்களில் வந்துள்ள சொல்லேனும், தொடரேனும், கருத்தேனும் அத்தகைய செய்யுட்கள் பத்தினைக் கொண்ட உட்பிரிவுகளுக்குப் பெயராய் அமைந்திருத்தல், ஐங்குறுநூற்றில் அறியப்படுகின்றது. இவற்றிலிருந்து புலவருக்கும், செய்யுளுக்கும், செய்யுட்கள் பத்தினைக் கொண்ட பகுதிக்கும் சிறப்புக் கருதிப் பெயரிட்டு வழங்கும் மரபு, முற்காலத்தில் இருந்தமை புலப்படும். இவற்றை நோக்கும்போது, சொற்சுவை பொருட்சுவைகளை நாம் உணர்ந்து இன்புறுமாறு, நமக்கு அறிவு விருந்தளித்த பண்டைத் தமிழ்ப் புலவர்களின் அறிவாற்றலும், அவர்களுடைய செய்யுட்களைச் சுவைத்து உணர்ந்து பெயர் வைத்து, அவற்றின் தனிச் சிறப்புக்களைப் புலப்படுத்திய அறிஞர்களின் இலக்கிய நுகர்ச்சித் திறனும் இனிது விளங்கும்.

## தொகுத்தோரும், தொகுப்பித்தோரும்

இத் தொகை நூற் செய்யுட்களைத் தொகுத்தோர், தொகுப்பித்தோர் பெயர்களில், பலருடைய பெயர்கள், இப்போது தெரியவில்லை. தெரிந்த வரையில் நோக்கும்போது, இவர்களில் சிலர் இயற்றிய செய்யுட்களும் தொகை நூல்களில் காணப்படுகின்றன. மேலும், தொகுத்தோரும், தொகுப்பித்தோரும் இயற்றிய செய்யுட்கள், அவர்களால் தொகுக்கவும் தொகுப்பிக்கவும் பெற்ற தொகை நூல்களில் சேர்க்கப் பெற்றிருப்பதும்[1] குறிப்பிடத் தக்கது. எனவே, தொகுத்தோரும் தொகுப்பித்தோரும் நல்லிசைப் புலவராக இருந்தனர் என்பதும், இந் நூல்கள் தொகுக்கப் பெற்ற காலம், அவர்கள் காலத்திற்குப் பிற்பட்டது அன்று என்பதும் நினைத்தற்கு உரியனவாகும். சிலர், இவ் எட்டுத்தொகை நூல்கள், கி. பி. இரண்டாம் நூற்றுண்டிற்குப் பின், கி. பி. ஆறும் நூற்றுண்டிற்கு உட்பட்ட காலத்தில் தொகுக்கப் பெற்றிருத்தல் வேண்டும் என்றும் கருதுவர்.

---

1. கலித்தொகையினைத் தொகுத்த நல்லந்துவனுர் இயற்றிய செய்யுட்களாகக் கலித்தொகையில், நெய்தற்கலிச் செய்யுட்களும், அந் நூலின் கடவுள் வாழ்த்துச் செய்யுளும் உள்ளன.

   அகநானூற்றினைத் தொகுப்பித்த பாண்டியன் உக்கிரப் பெருவழுதி இயற்றிய செய்யுளாக, அகநானூற்றில், ''கூர்முண் முள்ளி'' என்று தொடங்கும் 26 ஆம் செய்யுள் உள்ளது.

அகநானூறு, ஐங்குறுநூறு ஆகிய நூல்கள் இரண்டிற்கும் தொகுத்தவர், தொகுப்பித்தவர் பெயர்களும், நற்றிணைக்குத் தொகுப்பித்தவர் பெயரும், கலித்தொகைக்குத் தொகுத்தவர் பெயரும் தெரிகின்றன. இவை, அவ்வந் நூலின் இறுதியில் உள்ள தொடர்களால் அறியப்படுகின்றன. குறுந்தொகையின் இறுதியில், "இத் தொகை முடித்தான் பூரிக்கோ" என்ற தொடர் காணப்படுகின்றது. இப் பூரிக்கோ, தொகுத்தவனோ தொகுப்பித்தவனோ என்பது, தெளிவாகத் தெரியவில்லை. பதிற்றுப்பத்து, பரிபாடல், புறநானூறு ஆகியவற்றிற்குத் தொகுத்தவர், தொகுப்பித்தவர் இன்னார் என்பது விளங்கவில்லை[1] தொகுத்தவர், தொகுப்பித்தவர் பெயர்கள், தெரிந்த வரையில் பின் வருமாறு :—

| நூற் பெயர் | தொகுத்தவர் பெயர் | தொகுப்பித்தவர் பெயர் |
|---|---|---|
| 1. அகநானூறு— | மதுரை உப்பூரிகுடி கிழார் மகனார் உருத்திர சன்மர்[2]. | பாண்டியன் உக்கிரப் பெருவழுதி[3] |

1. பதிற்றுப்பத்தும், பரிபாடலும் முழுதும் கிடைக்காமையினால், அந் நூல்களின் இறுதியில் இருத்தற்கு உரிய தொகுத்தவர், தொகுப்பித்தவர் பெயர்களை அறிய இயலவில்லை. புறநானூறு முழுதும் கிடைத்திருந்தும் அதனைத் தொகுத்தவர், தொகுப்பித்தவர் பெயர்களை அறிதற்கு உரிய தொடர் காணப்படவில்லை.

2. இவர், இறையனார் களவியலிற்குச் சங்கப் புலவர்களால் எழுதப்பட்ட உரைகளைக் கேட்டு, அவற்றுள், நக்கீரனாரின் உரை சிறந்தது என முடிவு செய்தவர் என்பர்.

3. இவன், கடைச்சங்க காலத்து இறுதி அரசன் என்பர்.

| நூற் பெயர் | தொகுத்தவர் பெயர் | தொகுப்பித்தவர் பெயர் |
|---|---|---|
| 2. நற்றிணை | — | பன்னாடு தந்த பாண்டியன் மாறன்வழுதி |
| 3. ஐங்குறுநூறு | புலத்துறை முற்றிய கூடலூர் கிழார் | யானைக்கட் சேய் மாந்தரஞ் சேரல் இரும்பொறை |
| 4 கலித்தொகை | நல்லந்துவனார் | — |

இப் பெயர்களை நோக்கும்போது, அகநானூற்றினைத் தொகுப்பித்த பாண்டியன் உக்கிரப் பெருவழுதியும், நற்றிணையினைத் தொகுப்பித்த பன்னாடு தநத பாண்டியன் மாறன் வழுதியும் பாண்டிய வேந்தர்கள் என்பது விளங்கும். இதனால், அகநானூறும், நற்றிணையும் தொகுக்கும் முயற்சி, மதுரையில் நடைபெற்றது என நினைக்கலாம். அகப்பொருள் பற்றிய ஆயிரத்து இருநூறு ஆசிரியப் பாக்களைத் தேர்ந்தெடுத்து, அவற்றை, அடிகளின் எண் அளவு காரணமாக, அகநானூறு நற்றிணை, குறுந்தொகை என, மூன்று நூல்களாகப் பிரித்துத் தொகுக்கும் பணி, ஓரிடத்தில் ஒரு காலத்தில் நிகழ்ந்திருக்கலாம். எனவே, இம் மூன்று நூல்களும் மதுரையில் தொகுக்கப்பட்டன என்று கொள்ளுதல் பொருந்துவதாகும். குறுந்தொகை முடித்த பூரிக்கோ, மதுரை நகரினர் எனப் பேரா

சிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளை அவர்கள் கருது வதும்[1] இங்கு நினைக்கத் தக்கது. ஐங்குறுநூற்றினைத் தொகுப்பித்தவன், சேர வேந்தன் என்பது, மேலே குறிப்பிடப்பட்டது.

தொகுப்பித்தவராக இப்போது அறியப்படும் மூவரில், அகநானூற்றினையும், நற்றிணையினையும் தொகுப்பித்த இருவரும் பாண்டியராகவும், ஐங்குறு நூற்றினைத் தொகுப்பித்தவன் சேரனாகவும் உள்ளனர்.[2] மேலும், சேரர், பாண்டியர், சோழர் ஆகியோரில், பலர் இயற்றிய செய்யுட்கள், எட்டுத் தொகை நூல்களில் காணப்படுகின்றன. எனவே, வேந்தர்கள், புலவர்களாகவும், புலவர்களின் செய்யுட்களைப் போற்றியவர்களாகவும் இருந்தனர் என அறியலாம். இச் செய்திகளையும், தொல்காப்பியம், நிலந்தரு திருவிற் பாண்டியன் அவையில் அரங்கேற்றப்பட்டது என்ற செய்தியினையும் எண்ணிப் பார்க்கும்போது, தமிழ் நூல்கள் தோன்றுதற்கு அக்காலத் தமிழ் வேந்தர்களின் தொண்டு, உயிர்நிலையாய் இருந்தது என்பது, உணர்தற்குரியதாகும். எனவே, மொழி வளர்ச்சி சிறப்பதற்கு ஆட்சியாளரின் ஆதரவு இன்றியமையாதது என்னும் உண்மை, இங்கு நினைக்கத் தக்கது.

---

1. இலக்கிய தீபம், பக்கம், 72.

2. தொகை நூல்களில், சோழ வேந்தர் தொகுத்த நூலாக, இதுவரை ஒன்றும் தெரியவில்லை என்பது நினைத்தற்குரியது.

**காலம்**

எட்டுத்தொகை நூல்களை, அவை தொகுக்கப்பட்ட கால முறையில், குறுந்தொகை, நற்றிணை, அகநானூறு, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, புறநானூறு என வரிசைப்படுத்தலாம் என்றும், எஞ்சியுள்ள கலித்தொகையும், பரிபாடலும் தோன்றிய கால முறை, எளிதில் வரையறுக்கக் கூடியது அன்று என்றும் பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளை அவர்கள் கூறியுள்ளார்கள்.[1] "இவ் இலக்கியங்களின் திருந்திய வடிவங்களையும், செய்யுள் அழகுகளையும், முதிர்ந்த பக்குவத்தையும் நோக்குமிடத்துக் கிறிஸ்துவப்தத்திற்கு மிகமிக முற்பட்ட காலத்தே, தமிழ் இலக்கியங்கள் உருப்பெறத் தொடங்கியிருத்தல் வேண்டும் என்று எளிதில் ஊகித்தல் கூடும்"[2] என்று, பேராசிரியர் எஸ் வையாபுரிப் பிள்ளை அவர்கள் எழுதியிருப்பதும் இங்குக் குறிப்பிடத்தக்கது. பரிபாடலிலும், கலித்தொகையிலும் உள்ள செய்யுட்களின் சொல், பொருள் ஆகியவற்றின் அமைப்பை நோக்கி, இவற்றில் உள்ள சில செய்யுட்கள், பிற தொகை நூல்களின் செய்யுட்களுக்குப் பிற்பட்டன என்று கருதுவோர் உண்டு.

**கடவுள் வாழ்த்து**

இவ் எட்டுத்தொகை நூல்களுள், ஆறு நூல்களுக்குக் கடவுள் வாழ்த்துச் செய்யுட்கள் உள்ளன.

---

1. இலக்கிய தீபம், பக்கம், 80—81.
2. இலக்கணச் சிந்தனைகள், பக்கம், 37.

பதிற்றுப்பத்து, பரிபாடல் ஆகிய நூல்கள் இரண்டும் முழுதும் கிடைக்காமையினால், இவற்றின் கடவுள் வாழ்த்தினைப் பற்றிய செய்தி தெரியவில்லை. ஆயினும், "எரியெள்ளு வன்ன நிறத்தன்"[1] என்று தொடங்கும் செய்யுள், பதிற்றுப்பத்திற்கு உரிய கடவுள் வாழ்த்துச் செய்யுளாக இருத்தல் கூடுமா? என்று கருதுகின்றனர்.[2] பரிபாடலில், அதன்கண் உள்ள முதற் செய்யுளே, கடவுள் வாழ்த்தாக உள்ளது என்பாரும் உண்டு. மேலும், இந்நூல், கடவுளரைப் பற்றிய செய்யுட்களையே மிகுதியாக உடையது என்பதும் நினைத்தற்குரியது. கலித்தொகையில் உள்ள கடவுள் வாழ்த்துச் செய்யுள், நல்லந்துவனரால் இயற்றப்பட்டது என்பர். இது, சிவபெருமானைப் பற்றியது. அகநானூறு, நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, புறநானூறு ஆகிய நூல்கள் ஐந்திலும் உள்ள கடவுள் வாழ்த்துச் செய்யுட்கள், பாரதம் பாடிய பெருந்தேவனரால் இயற்றப் பெற்றவையாகும்.

இப் பெருந்தேவனர், பாரதக் கதையைத் தமிழில், உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுளாக இயற்றினர் என்பர். இச் சிறப்புக் காரணமாக, இவர், பாரதம் பாடிய பெருந்தேவனர் எனப் பெயர் பெற்றிருக்கலாம். இப் பாரதத்தின் சில செய்யுட்கள், யாப்பருங்கல விருத்தி உரையிலும், தொல்

1. தொல்காப்பியம், பொருளதிகாரம், புறத்திணையியல், நூற்பா, 26, நச்சினர்க்கினியர் உரை.

2. இலக்கிய தீபம், பக்கம், 121—124.

காப்பியப் பொருளதிகாரத்து நச்சினார்க்கினியர் உரையிலும் மேற்கோளாக வந்துள்ளன. பெருந்தேவனார் எனப் பிறரும் உளர்[1] ஆதலின், அவரின் வேறுபடப் பாரதம் பாடிய பெருந்தேவனார் என, இவர் வழங்கப்பட்டார் என்றும் கருதலாம். இப் பெருந்தேவனார், சங்க காலத்தவர் என்றும், பிற்காலத்தவர் என்றும் இரண்டு கருத்துக்கள் உள்ளன. ஆயினும், பிற்காலத்தவராக இருக்கலாம் என்னும் கொள்கையில், உள்ளம் செல்கின்றது.

இவர் இயற்றியுள்ள கடவுள் வாழ்த்துச் செய்யுட்களில், நற்றிணையில் இருப்பது, திருமாலைப் பற்றியது. குறுந்தொகையில் இருப்பது, முருகப் பெருமானைப் பற்றியது. அகநானூறு, ஐங்குறுநூறு, புறநானூறு ஆகிய நூல்கள் மூன்றிலும் இருப்பவை, சிவபெருமானைப் பற்றியன. இக் கடவுள் வாழ்த்துச் செய்யுட்கள், அவ்வந் நூலில் உள்ள செய்யுள் வகை, செய்யுள் நடை, அடி எண் அளவு முதலியவற்றை ஒட்டி அமைந்துள்ளன. இவ்வாறு, பாரதம் பாடிய பெருந்தேவனாரும், நல்லந்துவனாரும் இயற்றிய கடவுள் வாழ்த்துச் செய்யுட்களே, இப்போது தமிழ் நூல்களின் முதலில் காணப்படும் கடவுள் வாழ்த்துச் செய்யுட்களில் பழமையானவையாகும்.

---

1. பெருந்தேவனார் என்னும் பெயர் உடைய புலவர் இயற்றிய செய்யுட்கள், தொகை நூல்களில் உள்ளன.

இனி, இவ் எட்டுத்தொகை நூல்களுள், ஒவ்வொரு நூலினையும் பற்றிய செய்திகளை, ஓரளவு அறிய முற்படுவோம். [1], [2].

---

1. எட்டுத்தொகை நூல்களில், நெடுந்தொகை, நற்றிணை, குறுந்தொகை ஆகிய நூல்கள் மூன்றிலும் உள்ள செய்யுட்கள் பலவற்றின் பொருள் நலங்களைத் தெளிவுபடுத்தி, ஒவ்வொரு நூலினையும் பற்றி இரண்டிரண்டு நூல்களாகச் சிறந்தநூல்கள் ஆறனை, மதுரைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர், பேராசிரியர், டாக்டர் மு. வரதராசனார் அவர்கள் எழுதியுள்ளார்கள். அவை, நெடுந்தொகைச் செல்வம், நெடுந்தொகை விருந்து, நற்றிணைச் செல்வம், நற்றிணை விருந்து, குறுந்தொகைச் செல்வம், குறுந்தொகை விருந்து என்னும் பெயர்களை உடையனவாகும்.

2. அகநானூறு முதலிய தொகை நூல்கள் எட்டிற்கும் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினர், தனித் தனியே மாநாடுகள் கூட்டித் தக்க புலவர்களைக் கொண்டு, தலைமை உரைகளும், சொற்பொழிவுகளும் நிகழ்த்துவித்து, அவற்றைத் தனித்தனி நூல்களாக வெளியிட்டிருக்கின்றனர். இவ் வகையில், ஒவ்வொரு தொகை நூலிற்கு ஒவ்வொன்றாகச் சொற்பொழிவு நூல்கள், எட்டு உள்ளன.

## 2. அகநானூறு

இந் நூலில், கடவுள் வாழ்த்துச் செய்யுள் உட்பட, நானூற்றொரு ஆசிரியப் பாக்கள் உள்ளன. கடவுள் வாழ்த்துச் செய்யுள் நீங்கலாக, அகப் பொருள் பற்றிய நானூறு பாக்களைக் கொண்டமையினால், இந்நூல், அகநானூறு எனப் பெயர் பெற்றது. இந்நூற் செய்யுட்கள், பதின்மூன்று அடிச் சிற்றெல்லையையும், முப்பத்தோரடிப் பேரெல்லையையும் உடையன.

### நெடுந்தொகை

இந்நூலிற்கு நெடுந்தொகை எனவும் பெயர் உண்டு. அகப்பொருள் பற்றிய பிற தொகை நூற் செய்யுட்களினும் அடி எண் அளவு மிகுந்த செய் யுட்களால் தொகுக்கப்பட்டமையினால், இந்நூல், இப் பெயர் பெற்றிருக்கலாம். இந் நூற் செய்யுட் களினும் அடி எண் அளவில் குறைந்த செய்யுட் களால் தொகுக்கப் பெற்ற மற்றொரு தொகை நூலிற்குக் குறுந்தொகை என்னும் பெயர் இருப் பது, இங்கே நினைக்கத் தக்கது. இரண்டு பொரு ளைக் கண்டபோது, ஒன்று குறியது என்றும், மற்

ளென்று அதனினும் நெடியது என்றும் அறியலாமே அன்றி, ஒரு பொருளைக் கண்ட அளவில், அது குறியது என்றேனும் நெடியது என்றேனும் முடிவு செய்தல் இயலாது. ஆதலால், குறுந்தொகை என்ற பெயர், தொகை நூல் ஒன்றிற்கு இருத்தலை நோக்கும்போது, நெடுந்தொகை என்னும் பெயர் கொண்ட மற்றொரு தொகை நூல் இருத்தல் வேண்டும் என்பது உறுதியாகும். ஆதலின், இந் நூலிற்கு நெடுந்தொகை என்ற பெயரே, முதலில் வழங்கப் பட்டிருக்கலாம் என்பது தோன்றுகின்றது. நெடுந் தொகை என்னும் இப் பெயரினைப் பேராசிரியரும்,[1] நச்சினார்க்கினியரும்,[2] இறையனார் களவியல் உரையாசிரியரும்[3] வழங்கியுள்ளனனர்.[4] இந் நூலின் இறுதியில் உள்ள பாயிரத்திலும், அதனை அடுத்துள்ள உரைநடைப் பகுதியிலும் இந்நூற் பெயர், அகநானூறு எனக் காணப்படாமல், நெடுந்தொகை என்றே காணப்படுதலும் குறிப்பிடத் தக்கது.

---

1. தொல்காப்பியம், பொருளதிகாரம், செய்யுளியல், நூற்பா, 236, பேராசிரியர் உரை.
2. தொல்காப்பியம், பொருளதிகாரம், அகத்திணையியல், நூற்பா, 53, நச்சினார்க்கினியர் உரை.
3. இறையனார் களவியல், நூற்பா, 1, உரை.
4. பேராசிரியர், டாக்டர் மு. வரதராசனார் அவர்கள், இந் நூல் நலம் பற்றித் தாம் எழுதிய நூல்களுக்கு அகநானூற்றுச் செல்வம், அகநானூற்று விருந்து எனப் பெயரிடாமல், நெடுந்தொகைச் செல்வம், நெடுந்தொகை விருந்து எனப் பெயர் வைத்திருப்பதும் இங்கே நினைக்கத் தக்கது.

எனவே, மிக்க எண் அளவு அடிகளை உடைய செய் யுட்களின் தொகுப்பிற்கு நெடுந்தொகை எனவும், அதனினும் குறைந்த எண் அளவு அடிகளை உடைய செய்யுட்களின் தொகுப்பிற்குக் குறுந்தொகை என வும் முன்னோர் பெயர் வழங்கியிருத்தல் வேண்டும் என்பது புலனும்.

நற்றிணை என்னும் தொகை நூலும் அகநானூற் றுச் செய்யுள் அடிகளினும் குறைந்த எண் அளவு அடிகளை உடைய செய்யுட்களால் தொகுக்கப்பட்ட தாயினும் அந் நூலிற்கு நற்றிணை என, வேறு பெயர் வழங்கி விட்டமையினால், அந்நூற் செய்யுட்களினும் குறைந்த எண் அளவு அடிகளை உடைய செய்யுட் களின் தொகுப்பிற்குக் குறுந்தொகை எனப் பெயர் வழங்கியது பொருத்தமாகும்.

## அகநானூறு என்ற பெயர்

நற்றிணை, குறுந்தொகை ஆகிய தொகை நூல் களும் அகப்பொருள் பற்றியனவாகவும், தனித்தனி நானூறு ஆசிரியப் பாக்களை உடையனவாகவும் அமைந்து, அவையும் அகநானூறு என்று பெயர் பெறத் தக்கனவாக இருந்தும் இந்நூல் ஒன்றற்கே, அகநானூறு எனப் பெயர் வழங்குவது, நினைக்கத் தக்கது.

பெரும்பாலும் இந்நூற் செய்யுட்கள் எல்லா வற்றிலும் அகப்பொருளின் உயிர்ப் பொருளாகிய உரிப்பொருளுடன், முதற்பொருள் கருப்பொருள் களைப் பற்றிய செய்திகளும் அழகாகக் கூறப் பெற் றிருத்தலாலும், இம் மூவகைப் பொருள்களையும்

விரிவாகக் கூறுதற்கு ஏற்ப, இந்நூற் செய்யுட்கள், மற்றைய தொகை நூற் செய்யுட்களினும் அடி எண் அளவினால் மிகுந்தனவாக இருத்தலாலும் இந் நூலிற்கு அகநானூறு என்ற பெயர், பின்னர் வழங்கப் பெற்றது என்று கருதலாம். மேலும், புறப்பொருள் பற்றிய நானூறு செய்யுட்களைக் கொண்ட நூல், புறநானூறு எனப் பெயர் பெற்றிருப்பதும், பெரும்பாலும் புறநானூற்றில் இருப்பன போன்று, அடி எண் அளவினால் மிகுந்த செய்யுட்கள், இந் நெடுந்தொகையில் இருப்பதும் இந் நூலிற்கு அகநானூறு எனப் பெயர் வழங்குதற்குத் தூண்டியிருக்கலாம்.

எட்டுத்தொகையுள், அகப்பொருள் பற்றிய பிற நூல்கள் இருந்தும் இந் நூலிற்கே, அகம் எனவும், அகப்பாட்டு எனவும் பிற பெயர்கள், வழங்கப் பெறுவதும் குறிப்பிடத் தக்கது. இது, இந் நூலின் சிறப்பினைக் காட்டும் என்பர். இவ்வாறே, புறநானூற்றிற்கும் புறம் எனவும், புறப்பாட்டு எனவும் பெயர் வழங்கப் பெறுவதும் இங்கு நினைத்தற்குரியது.

### செய்யுட்களை இயற்றிய புலவர்கள்

அகநானூற்றில் உள்ள செய்யுட்களை இயற்றிய புலவர்கள், நூற்று நாற்பத்தைவர்[1] என்று,

1. இந்நூற் செய்யுட்களை இயற்றிய புலவர்கள், நூற்று ஐம்பத்துஎண்மர் என்று, டாக்டர் மா.இராசமாணிக்கம் பிள்ளை அவர்கள் எழுதியுள்ளார்கள். (தமிழ் மொழி இலக்கிய வரலாறு, பக்கம், 178-183.)

அகநானூற்றின் இறுதியில் காணப்படும் பாயிரத்தை அடுத்துள்ள உரைநடைப் பகுதியில், குறிப்பிடப் பெற்றுள்ளது. இவர்களுள் 114, 117, 165 ஆம் எண் உள்ள செய்யுட்களை இயற்றிய புலவர்களின் பெயர்கள் தெரியவில்லை.

## நூலின் மூன்று பிரிவுகள்

இந் நூலினைக் களிற்றியானை நிரை, மணிமிடை பவளம், நித்திலக் கோவை என மூன்று வகையாகப் பிரித்துள்ளனர். களிற்றியானை நிரையில், 1 முதல் 120 இறுதியாக உள்ள 120 செய்யுட்களும், மணி மிடை பவளத்தில், 121 முதல் 300 இறுதியாக உள்ள 180செய்யுட்களும், நித்திலக் கோவையில், 301 முதல் 400 இறுதியாக உள்ள 100 செய்யுட்களும் உள்ளன. அகநானூற்றுச் செய்யுட்களைப் பலமுறை படித்துச் சுவைத்த ஒருவரே, இவ்வாறு பெயரிட்டிருத்தல் வேண்டும். இப் பெயர்களை உரையாசிரியர்கள், தனி நூல்களின் பெயர்கள் போலவும் எடுத்தாண்டுள்ளனர்.

செய்யுட்களின் சொல் நடையினைக் கொண்டு, களிற்றியானை நிரை எனவும், சொல் நடையினையும், பொருள் அமைப்பினையும் கொண்டு, மணிமிடை பவளம் எனவும், பொருள் அமைப்பினைக் கொண்டு, நித்திலக் கோவை எனவும் பெயரிட்டனர் என்று சிலர் கூறுவர். வேறு சிலர், ஆண் யானைகள் அணிவகுத்துச் செல்வதைப் போல, அருஞ்சொற்கள், எங்கும் காணப்படுதலால், களிற்றியானை நிரை எனவும், மணியும் பவளமும்போல, அருஞ்சொற்களும், எளிய

சொற்களும் விரவி இருத்தலால், மணிமிடை பவளம் எனவும், எளிய சொற்கள் எங்கும் இருத்தலால், நித்திலக் கோவை எனவும் பெயர் பெற்றன என்பர். நூலின் இறுதியில் உள்ள உரைநடைப் பகுதியில், பொருள் காரணமாகக் களிற்றியானை நிரை எனவும், செய்யுளும் பொருளும் ஒவ்வாமையினால், மணிமிடை பவளம் எனவும், செய்யுளும், பொருளும் ஒத்தலால், நித்திலக்கோவை எனவும் பெயர் வழங்கப்பட்டது என்ற குறிப்புக் காணப்படுகின்றது. இப் பெயர்க் காரணங்கள், ஆராய்தற்கு உரியன. இவை போன்ற பிரிவு, பிற தொகை நூல்களில் இல்லை. இது, இந் நூலில் மட்டும் காணப்படுகின்ற தனி அமைப்பாகும்.

## செய்யுட்களின் எண் முறை அழகு

இந் நூலில், ஐந்திணைகளையும் பற்றிய செய்யுட்களுக்குக் கொடுக்கப் பெற்றிருக்கும் எண் முறையிலும் வியப்பும், மகிழ்ச்சியும் தரும் தனி அமைப்பு உள்ளது. ஒவ்வொரு பத்துச் செய்யுட்களிலும் ஒற்றை எண் உள்ள செய்யுட்கள் (1, 3, 5, 7, 9ஆம் எண் உள்ள செய்யுட்கள்), பாலைத் திணை பற்றியன. இரண்டும் எட்டும் ஆகிய எண் உள்ள செய்யுட்கள், குறிஞ்சித் திணை பற்றியன. நான்கு என்னும் எண் உள்ள செய்யுட்கள், முல்லைத் திணை பற்றியன. ஆறு என்னும் எண் உள்ள செய்யுட்கள், மருதத் திணை பற்றியன. பத்து என்னும் எண் உள்ள செய்யுட்கள், நெய்தல் திணை பற்றியன. இதிலிருந்து, பாலைத்

திணைக்கு இருநூறு செய்யுட்களும், குறிஞ்சித் திணைக்கு எண்பது செய்யுட்களும், முல்லை, மருதம், நெய்தல் ஆகிய திணைகள் ஒவ்வொன்றிற்கும் தனித் தனி நாற்பது செய்யுட்களும் உரியன என்பது தெளி வாகும். இவ்வாறு அமைத்ததனால், ஒரு செய்யுளின் எண்ணினை அறிந்தவுடனே, அவ் எண்ணிற்கு உரிய செய்யுள், இன்ன திணைச் செய்யுள் என்பது புலப் பட்டுவிடும். இந் நூலின் அடி எண் வரையறைக்கு உட்பட்ட செய்யுட்கள், வேண்டும் அளவு, ஒவ் வொரு திணையிலும் கிடைத்தமையினால், இந்நூற் செய்யுட்களை, இவ்வாறு முறைப்படுத்தி அமைத்தல் இயல்வது ஆயிற்று.

நற்றிணையிலும், குறுந்தொகையிலும், உள்ள செய்யுட்களை, அகநானூற்றில் போல, எண் முறை யில் வகைப்படுத்தாமைக்குக் காரணம், உரிய அடி எண் வரையறைக்கு உட்பட்ட செய்யுட்கள், வேண் டும் அளவு, ஒவ்வொரு திணைக்கும் இல்லாமையாக இருக்கலாம். மேலும், நற்றிணைக்கும், குறுந்தொகைக் கும் உரிய மூல ஏடுகளில், கிளவி (கருத்து) மட்டும் உள்ளதே அன்றித் திணைப் பாகுபாடு காணப்பட வில்லை என, அறிஞர்கள் கூறுவதும் இங்கு நினைக்கத் தக்கது.[1] ஆனால், நற்றிணையில், மருதத் திணை பற்றி

---

1. குறுந்தொகையின் மூலத்தினை வித்துவான் சோ. அருணாசல தேசிகர் அவர்கள், 1933ஆம் ஆண்டில் பதிப்பித்து வெளியிட்டுள்ளார்கள். இப் பதிப்பில், குறுந்தொகைச் செய்யுட்களுக்குத் திணைகள் குறிப் பிடப்பட்டுள்ளன.

உள்ள செய்யுட்கள், முப்பத்திரண்டாகும். இவற்றுள், 215 ஆம் செய்யுள் ஒன்று தவிர, ஏனைய முப்பத்தொரு செய்யுட்களும் பத்து இருபது முதலிய முழு எண்களிலேயே அமைந்துள்ளன. இதனை நினைக்கும்போது, இந் நூலிலும் எண் முறையில் திணை அமையுமாறு, செய்யுட்களைத் தொகுக்க முயன்றனரோ என்ற எண்ணம் எழுகின்றது.

## ஒவ்வொரு திணைக்கும் உரிய செய்யுட்கள் ஒருங்கு சேரத் தொகுக்கப்படாமை

அகப்பொருள் பற்றிய பிற தொகை நூல்களாகிய ஐங்குறுநூற்றிலும், கலித்தொகையிலும் ஒவ்வொரு திணைகளும் உரிய செய்யுட்கள் ஒருங்கு சேர்ந்து அமைந்துள்ளன. ஐங்குறுநூற்றில் ஒவ்வொரு திணைக்கும் தனித்தனி நூறு செய்யுட்களாய், ஒத்த எண் அளவினவாக இருப்பது போலக் கலித்தொகையில், திணைகளுக்கு உரிய செய்யுட்கள், ஒத்த எண் அளவினவாக இல்லையெனினும் அச் செய்யுட்களும் திணை முறைப்படி ஒருங்கு சேர்ந்து உள்ளன. இவ்வாறே, இவ் அகநானூற்றிலும் முதலில், பாலைத் திணைக்கு உரிய இருநூறு செய்யுட்களையும், இரண்டாவது குறிஞ்சித் திணைக்கு உரிய எண்பது செய்யுட்களையும், மூன்றுவது, முல்லைத் திணைக்கு உரிய நாற்பது செய்யுட்களையும், நான்காவது, மருதத் திணைக்கு உரிய நாற்பது செய்யுட்களையும், ஐந்தாவது, நெய்தல் திணைக்கு உரிய நாற்பது செய்யுட்களையும் தொகுத்திருக்கலாமே என்ற வினா

வும் எழுகின்றது. அவ்வாறு தொகுத்தால், ஒத்த சொல் நடை, பொருள் நடை முதலிய காரணங்களால், களிற்றியானை நிரை முதலிய மூன்று பிரிவாக, இந்நூற் செய்யுட்களை வகைப்படுத்தி இருக்கும் நோக்கத்திற்கு, அது, தடையாக இருக்கலாம். அன்றியும், இப்போது உள்ளவாறு, எண்ணினை அறிந்தவுடன் திணையை அறியும் நிலையில், செய்யுட்களை அமைக்க நேர்வதில், தொகுத்தவர் கண்ட அழகு உணர்ச்சியும் கெட்டுவிடும். மேலும், ஐங்குறு நூற்றிலும், கலித்தொகையிலும் ஒவ்வொரு திணைக்கு உரிய செய்யுட்கள், ஒவ்வொரு புலவரால் இயற்றப் பெற்றிருத்தலும், அகநானூற்றில், ஒவ்வொரு திணைக்கு உரிய செய்யுட்களும் புலவர் பலரால் இயற்றப் பெற்றிருத்தலும் இங்கு நினைத்தற்குரியனவாகும்.

**கருத்து**

இந் நூலின் ஒவ்வொரு செய்யுள் இறுதியிலும் அதன் கருத்து இன்னது என்பது, எழுதப்பட்டுள்ளது. இது, கிளவி என்று கூறப்படும். இதனை எழுதியவர் பெயர் தெரியவில்லை. இக் கருத்து, இந் நூலினைத் தொகுத்தவராலேனும், இந் நூலினைப் படித்துச் சுவைத்த வேறு ஒருவராலேனும் எழுதப் பட்டிருத்தல் வேண்டும் என்று அறிஞர் கருதுவர்.

**உரைகள்**

இந் நூலின் கடவுள் வாழ்த்திற்கும், முதற்கண் உள்ள தொண்ணூறு செய்யுட்களுக்கும் பழைய உரை ஒன்று உள்ளது. இவ் உரை, மேற் குறிப்பிட்ட

கருத்து (கிளவி) எழுதப்பட்டதற்குப் பின்னர், எழுதப் பெற்றதாதல் வேண்டும். இவ் உரை, ஒவ்வொரு செய்யுளிலும் உள்ள அருஞ் சொற்களுக்கும், அருந் தொடர்களுக்கும் பொருள் புலப்படுத்தியும், வேண்டும் இடங்களில் சொல் முடிபு, பொருள் முடிபுகளைக் காட்டியும், அகத்திணைக்குச் சிறந்த உள்ளுறை உவமம், இறைச்சிப் பொருள் ஆகியவற்றை ஆங்காங்கே இனிது விளக்கியும், கதைக் குறிப்பு உள்ள இடங்களில், கதையைப் புலப்படுத்தியும் அமைந்துள்ளது. இவ் உரையினை எழுதியவர் இன்னார் என்பது தெரியவில்லை. இவ் உரை உள்ள ஏட்டில், கொல்லம் 460 என்று காணப்படுகின்றது. ஆதலால், இவ் உரையாசிரியர், இற்றைக்கு 688 ஆண்டுகளுக்கு முற்பட்டவர் என அறியலாம். இவ் உரையுடன், வே. இராசகோபாலையங்கார் அவர்கள், 91 முதல் 160 முடிய உள்ள செய்யுட்களுக்கு உரை எழுதியும், பின் உள்ள செய்யுட்களுக்குக் குறிப்புரை எழுதியும் 1923ஆம் ஆண்டில், இந் நூலினைப் பதிப்பித்துள்ளார்கள்.

நாவலர், ந. மு. வேங்கடசாமி நாட்டார் அவர்களும், கரந்தைக் கவியரசு ரா. வேங்கடாசலம் பிள்ளை அவர்களும் சேர்ந்து, இந் நூல் முழுதிற்கும் எழுதிய உரை, 1945 ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது. இவ் உரைக்கு வேங்கட விளக்கு எனப் பெயரிட்டுள்ளனர்.

இந் நூலின் இறுதியில் காணப்படும் பாயிரத்தை அடுத்துள்ள உரைநடைப் பகுதியில், இந் நூலின் கருத்தினை, இடையளநாட்டு மணக்குடியான்

பால்வண்ண தேவனை வில்லவதரையன் என்பான், அகவலால் பாடினன் என்பது, குறிக்கப்பட்டுள்ளது. இதனல், இந் நூலிற்கு ஆசிரியப்பாவினல் ஆகிய கருத்துரை இருந்தது என்று கருதுவர். இக் கருத்துரை, இப்போது கிடைக்கவில்லை.

## வரலாற்றுக் குறிப்புக்கள், பழக்க வழக்கங்கள், வேறு சில செய்திகள்

அகப்பொருள் பற்றிய பிற தொகை நூல்களைக் காட்டிலும் இந் நூலில், வரலாற்றுக் குறிப்புக்களும் மிகுதியாக உள்ளன. எடுத்துக்காட்டாகத் தொண்டி, தனுக்கோடி, கொற்கை, செல்லூர், ஊணூர், கழுமலம், புறந்தை, சாய்க்கானம், குடவாயில் (குடந்தை) முதலிய ஊர்களைப் பற்றிய குறிப்புக்கள், இந் நூலில் காணப்படுகின்றன. மேலும், சோழர்கள், பல நாடுகளிலிருந்து தாம் கொண்டு வந்த திறைப் பொருள்களைக் குடந்தையில் சேர்த்து வைத்தனர் என்னும் குறிப்பும் இந் நூலில் உள்ளது.[1]

அன்றியும், பாடலிபுத்திர நகரத்தினைத் தலைநகராகக் கொண்டு, மகத நாட்டினை ஆண்ட நந்தர் என்பவர், தம்மிடம் இருந்த பொன்னையும், மணிகளையும் கங்கையாற்றின் கீழ்ப் புதைத்து வைத்த அரிய வரலாற்றுச் செய்தி, இந் நூலில்[2] இடம் பெற்றுள்ளது.

---

1. அகநானூறு, செய்யுள், 60.
2. அகநானூறு, செய்யுள், 265.

பாடலிபுத்திர நகரத்தினைப் பற்றிக் குறுந்தொகையினால் அறியப்படும் மற்றொரு வரலாற்றுக் குறிப்புப் பின்னர்க் குறுந்தொகை பற்றிய பகுதியில் கூறப்படும்.

குடவோலை பற்றிய குறிப்பும் இந் நூலில் உள்ளது.[1] பண்டைக் காலத்தில், ஆட்சி மன்றங்களுக்கு உறுப்பினரைத் தேர்ந்தெடுத்தற் பொருட்டுத் தகுதியுடையோர் பெயரை, மக்கள், ஓலையில் எழுதிக் குடத்தில் இடுவர். ஆவண மாக்கள், அக் குடத்தின் இலச்சினையை நீக்கி, ஓலைகளை எடுத்துப் பார்த்து, வெற்றி பெற்றோர் இவர் என அறிவிப்பர். இம் முறை, குடவோலை முறை எனப்படும். பழைய கல்வெட்டுக்களில், இம் முறை, விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

உள்ளி விழா என்னும் ஒரு வகை விழா நடைபெற்ற செய்தி, இந் நூலில் காணப்படுகின்றது.[2] இவ் விழாக் காலத்தில், கொங்கர்கள், தம் இடையில் மணிகளைக் கட்டிக் கொண்டு தெருவில் ஆடுவர். இவ் விழாவினைப் பற்றிய குறிப்பு, இறையனார் களவியல் உரையில் உள்ளது. மதுரை நகரில், ஆவணி அவிட்டமும், உறையூரில், பங்குனி உத்தரமும், கருவூரில், உள்ளி விழாவும் பெரு விழாக்களாகக் கொண்டாடப்பட்டன என்பது, இறையனார் களவியல் உரையினால்[3] தெரிகின்றது. இச் செய்தி,

---

1. அகநானூறு, செய்யுள், 77.
2. அகநானூறு, செய்யுள், 368.
3. இறையனார் களவியல், நூற்பா, 16, உரை.

தமிழ்நாட்டு மூவேந்தர்களின் தலைநகரங்களில் நடைபெற்ற பெரு விழாக்கள் மூன்றினைக் குறிப்பது போல் தோன்றுகின்றது. இவ் இறையனார் களவியல் உரையில்,[1] "சான்றோர் வருந்திய" என்னும் தலைப்பு உடைய செய்யுள் ஒன்று, மேற்கோளாகக் காணப்படுகின்றது. இச் செய்யுள், நற்றிணையில் காணப்படாதிருந்த 234 ஆம் செய்யுளாக இருக்கலாம் என, அந் நூலிற்கு உரை எழுதிய பின்னத்தூர் அ. நாராயணசாமி ஐயர் அவர்கள் கருதி, இச் செய்யுளை, அந் நூலில் சேர்த்துள்ளார்கள். இச் செய்யுளில், உறந்தைப் பங்குனி விழாவும், கருவூர் உள்ளி விழாவும் குறிப்பிடப்பட்டுள்ளன.

கார்த்திகைத் திங்களில், கார்த்திகை நாளில், இல்லங்கள்தோறும் விளக்குக்கள் ஏற்றி வைத்துக் கொண்டாடப் பெறும் கார்த்திகை விழாவினைப் பற்றியும்[2] இந் நூலில் குறிப்புக்கள் உள்ளன.

கடவுள் வாழ்த்திற்குப் பின், இந் நூலின் முதலாவதாக உள்ள களிற்றியானை நிரையின் முதற் செய்யுளிலும், களிற்றியானை நிரையின் இறுதிச் செய்யுளிலும் முருகக் கடவுளைப் பற்றிய குறிப்பு இருப்பது, நினைக்கத் தக்கது. இராமனையும்,[3] கண்ணனையும்[4] பற்றிய கதைக் குறிப்புக்களும் இந் நூலில் காணப்படுகின்றன.

---

1. இறையனார் களவியல், நூற்பா, 28, உரை.
2. அகநானூறு, செய்யுள், 11, 141, 185.
3. அகநானூறு, செய்யுள், 70.
4. அகநானூறு, செய்யுள், 59.

சங்க காலத்தில், தமிழகத்தில், பண்ட மாற்று முறையில் வாணிகம் நடைபெற்றது. இச் செய்தி யினை, நெய்தல் நிலத்தில் வாழும் மக்கள், உப்பை விற்று நெல்லைப் பெறுவர் என, இந் நூலில் கூறப் பெறுவதனால் அறியலாம்.[1] சங்க காலத் திருமண முறையும், வளர்பிறைக் காலத்தில் மணம் செய்வர் என்னும் குறிப்பும்[2] இந் நூலில் காணப் பெறு கின்றன.

## உள்ளத்தின் ஓர் இயல்பு

போரில் வெற்றி பெற்ற தலைவன், தன்னுடைய ஊருக்குத் திரும்பிச் செல்லத் தேரில் ஏறி அமர்ந்தான்; ஆனால், அவன், தேரில் ஏறி அமர்ந்த தனை அறிந்தானே அன்றித் தேர், தன் ஊருக்குப் போய்ச் சேர்ந்ததனை அவன் அறியவில்லை. தேர்ப் பாகன், தலைவி இருக்கும் இல்லின் முன், தேரினை நிறுத்தித் தலைவனை நோக்கி, இறங்குவாயாக என்று கூறியபோதுதான், தன்னுடைய ஊருக்கு வந்து சேர்ந்ததனைத் தலைவன் அறிந்தான். இதனால், தலை வன் மகிழ்ச்சியுற்றுத் தேர்ப்பாகனை நோக்கி, 'நீ, தேரில் பூட்டிய குதிரையின் வடிவாகக் காற்றினைப் பூட்டினையோ? அன்றி உனது மனத்தினைப் பூட்டி னையோ?' என்று வியப்பாக வினவினான். பின்னர்த் தேர்ப்பாகனை இறுகத் தழுவிக்கொண்டு தன் வீட்டிற்குள் சென்றான்; என்னும் கருத்து அமைந்த

---

1. அகநானூறு, செய்யுள், 140.
2. அகநானூறு, செய்யுள்; 86, 136.

செய்யுள்,[1] இந் நூலில் உள்ளது. இச் செய்யுளில், குதிரைகள் மிக விரைவாகச் சென்றதனைக் குறிப்பிடக் காற்றினைப் பூட்டினையோ எனவும், மனத்தினைப் பூட்டினையோ எனவும் கூறப்பட்டுள்ளது.[2] இக் கருத்துடன், வாயுவேகம், மனோவேகம் எனக் கூறப்படும் வடமொழித் தொடர், ஒத்து நோக்குதற்கு உரியது. மேலும், இச் செய்யுளில், 'தேரில் ஏறி அமர்ந்த தலைவனின் உள்ளம் தலைவியையே எண்ணிக் கொண்டிருந்தமையினால், தேர் ஓடி வந்ததனையும், அத் தேர், தன் ஊருக்கு வந்து சேர்ந்ததனையும் அவன் அறியவில்லை; தேர்ப்பாகன் கூறியவுடன்தான், ஊருக்கு வந்துவிட்டோம் என்ற நினைவு, அவனுக்கு உண்டாயிற்று' என்னும் கருத்துப் புலப்படுகின்றது. இதனால், ஒன்றனையே நினைத்துக் கொண்டிருப்பவருக்கு இடையில் நிகழும் எத்தகைய செயல்களும் தோன்றுவதில்லை என்னும் உள்ளத்தின் ஓர் இயல்பு, இனிது விளங்கும். மேலும், தன்னுடைய தேர்ப்பாகனைத் தலைவன் தழுவிக் கொண்டான் என, இச் செய்யுளில் காணப்படும் செய்தியிலிருந்து அக்கால மக்கள், தலைவர், பணியாளர் என்னும் உயர்வு தாழ்வு கருதாமல், அன்பினால் ஒன்றுபட்டு வாழ்ந்தனர் என்பதும் உணர்தற்கு உரியது.

---

1. அகநானூறு, செய்யுள், 384.
2. ''வான்வழங்கு இயற்கை வளிபூட் டினையோ
மான்உரு வாகநின் மனம்பூட் டினையோ.''

## குழந்தை உள்ளம்

தலைமகள், அவள் தோழியருடன் சிறிது நேரம் பந்து விளையாடினாலும் அவளது உடல் சோர்ந்து விட்டது என்று கருதிய தாய், பாலினைக் கிண்ணத்தில் கொண்டு சென்று, சோர்வு தீர, அதனை உண்ணுமாறு வற்புறுத்துவாள். அந் நிலையில், ஒருமுறை, அப் பாலினை உண்டு, மேலும் உண்ண அவள் மறுக்கும்போது, என் பங்கிற்காக ஒருமுறை உண்டாயாயின், இனி, உன் தந்தையின் பங்கிற்காக மற்றொருமுறை உண்பாயாக எனத் தாய் கூறுவாள்; என்னும் கருத்து அமைந்த இந்நூற் செய்யுள்,[1] சுவை தருவதாகும். இதுபோன்று, இனிய முறையில், குழந்தைகளின் மன நிலைக்கு ஏற்பத் தாய்மார்கள் பேசி, உண்ணச் செய்வதை இன்றும் காணலாம்.

## இசை இனிமை

மலைநாட்டு மகளிர், தினைப்புனத்தில் தங்கித் தினைக் கதிரை உண்ண வரும் கிளி முதலியவற்றை ஓட்டுதல், அக்கால வழக்கம் ஆகும். அவ்வாறு தினைப்புனம் காவல் செய்வோர், இனிய பாடல்களைப் பாடி மகிழ்ந்து காலம் கழிப்பர். இம் முறையில் அமைந்த இந்நூற் செய்யுள்[2] ஒன்றில், இசையின் ஆற்றல், எடுத்துக் கூறப்பட்டுள்ளது. தினைப்புனத்தினைக் காவல் செய்த குறமகள் ஒருத்தி, குறிஞ்சிப் பண்ணினைப் பாடினள். அப்போது,

---

1. அகநானூறு, செய்யுள், 219.
2. அகநானூறு, செய்யுள், 102.

அங்குத் தினைக் கதிரை உண்ண வந்த இளைய ஆண் யானை ஒன்று, அப் பண்ணினைக் கேட்டு மயங்கித் தினைக் கதிரினை உண்ணாமலும், தான் நின்ற நிலையினின்றும் பெயராமலும் உறங்கியது; என, இச் செய்யுளில் கூறப்பட்டிருப்பது, இன்பம் தருவதாகும்.

## விளக்கம் பெற்ற செய்யுட்கள்

தொல்காப்பியனார், ஒரு செய்யுளுக்கு மாத்திரை முதல் வண்ணம் ஈறாக உள்ள இருபத்தாறும் உறுப்புக்களாய் அமைதல் வேண்டும் என்று கூறியுள்ளார். இவ் உறுப்புக்கள் இருபத்தாறனுள், நோக்கு என்பதும் ஒன்றாகும். இதனைத் தொல்காப்பிய உரையாசிரியர்கள் விளக்கியுள்ளனர். அவர்களுள் ஒருவராகிய பேராசிரியர், "ஒரு செய்யுளில் எத்துணை அடிகள் இருப்பினும் அவற்றில் அமைந்துள்ள மாத்திரையும், எழுத்தும், அசையும், சீரும் ஆகிய எல்லாம், மீண்டும் நோக்கி நோக்கிப் பயன் கொள்ளும் வண்ணம், வற்றாத அறிவின் ஊற்றாய்ப் புதிய புதிய கருத்துக்களைத் தருவனவாய் இருத்தல் வேண்டும். அதுவே நோக்கு என்னும் உறுப்பு ஆகும்" என, விழுமியதோர் கருத்துத் தோன்ற உரை கண்டுள்ளார். இவரும், நச்சினார்க்கினியரும் தத்தம் உரைகளில், நோக்கு என்னும் இவ் உறுப்பிற்கு "முல்லை வைந்நுனை" என்று தொடங்கும் இந்நாற் செய்யுள்[1] ஒன்றினை இலக்கியமாக எடுத்துக் காட்டி, இதன் பொருள்

1. அகநானூறு, செய்யுள், 4.

நுட்பங்களைப் புலப்படுத்தியிருப்பது குறிப்பிடத் தக்கது. இச் செய்யுள், நாம் மீண்டும் மீண்டும் நோக்க, மேலும் மேலும் நுண்பொருள் தருவதாய் அமைந்துள்ளது. இதனைப் பற்றி விரிவாக, இந் நூலாசிரியர் எழுதிய கட்டுரை ஒன்று உள்ளது.[1]

இந் நூலில் உள்ள "அளிநிலை பொராஅது அமரிய முகத்தள்"[2] என்று தொடங்கும் செய்யுளின் பொருட் சிறப்புக்களை விளக்கி, ஓவச் செய்தி என்னும் பெயருடன், மதுரைப் பல்கலைக் கழகத் துணை வேந்தர், பேராசிரியர், டாக்டர் மு. வரதராசனார் அவர்கள் எழுதிய நூல் ஒன்று உள்ளது.

**உவமைகள்**

முயலினுடைய கண், நெல்லிக் காயைப் போல் உள்ளது.[3] நண்டினுடைய கண், வேம்பின் அரும்பு போல் உள்ளது.[4] மாம்பூ விழுவது, மழைத் துளி விழுவது போல் உள்ளது.[5] என, இந் நூலில் காணப் படும் உவமைகள், புலவர்களின் உற்று நோக்கும்

---

1. இக் கட்டுரை, அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில், 1955ஆம் ஆண்டில் நடைபெற்ற அனைத்து இந்தியக் கீழைத்திசைக் கலை மாநாட்டில், இந் நூலாசிரியரால் படிக்கப் பெற்றது. இந் நூலாசிரியரால் இயற்றப் பெற்ற நோக்கு என்னும் பெயர் உடைய நூலில், முதல் கட்டுரையாக, இது, வெளிவந்துள்ளது.
2. அகநானூறு, செய்யுள், 5.
3. அகநானூறு, செய்யுள், 284.
4. அகநானூறு, செய்யுள், 176.
5. அகநானூறு, செய்யுள், 236.

ஆற்றலைப் புலப்படுத்துகின்றன. மீனை உண்ணச் சென்ற நாரை, தன் அடியின் ஒலியினை அம் மீன் அறிந்து ஓடிவிடும் என்று அஞ்சி, மெல்ல மெல்ல அடி வைத்துச் செல்லுதல், காவல் பொருந்திய இல்லத்தில், களவாடுதற்குக் கள்வன் ஒருவன், மெல்ல மெல்லச் செல்வது போல் உள்ளது எனக் காணப் படும் உவமை,[1] நகைச் சுவை விளைப்பதாகும். மேகம், வானத்தில் செல்வது, விசும்பு உரிவதுபோல் உள்ளது என, இந் நூலில் கூறப்பட்டிருப்பது,[2] அழகான புனைந்துரையாகும்.

### கோவை

களவு ஒழுக்கம் நிகழும்போது, இரவுப் பொழுதில், தலைவனும் தலைவியும் கூடுதற்கு ஓர் இடம் குறிப்பிடப் பெறும். அவ் இடத்திற்குத் தலைவி வர இயலாமைக்கு நேரும் இடையூறுகளைத் தலைவி குறிப்பிடுவதாக, இந்நூற் செய்யுள் ஒன்று உள்ளது.[3] இச் செய்யுளில், "விழாக் காலத்தில் ஊர் மக்கள் உறங்காமலிருப்பது வழக்கம். அதற்கு மாறாக, விழா நிகழாத காலத்திலும் இவ் ஊர் மக்கள் உறங்கவில்லை. இவ் ஊரும். கடைத் தெருக்களும், ஏனைய தெருக்களும் உறங்கி ஒலி அடங்கினாலும் கடுஞ் சொற்களை உடைய தாய் உறங்கவில்லை; அரிய சிறையினைப் போன்ற தாய் உறங்கினாலும்,

1. அகநானூறு, செய்யுள், 276.
2. அகநானூறு, செய்யுள், 24.
3. அகநானூறு, செய்யுள், 122.

துயிலாத கண்களை உடைய ஊர்க் காவலர்,விரைந்து சுற்றித் திரிவர். அக் காவலர் உறங்கினாலும் நாய் குரைக்கும். நாய் உறங்கினாலும், பகல் போலத் திங்கள் ஒளி வீசும். அத் திங்கள் மறைந்து இருள் வருமாயின், கூகைச் சேவல், நள்ளிரவில் ஒலி செய்யும்; அதுவும் உறங்கினாலும் மனையில் இருக்கும் கோழி கூவும்" என்பவை, இடையூறுகளாகக் குறிப்பிடப் பெற்றுள்ளன. இவ் ஒரு செய்யுளில் குறிப்பிடப் பெற்ற இடையூறுகள் ஏழும் பிற்காலத்தில் தோன்றிய கோவை என்னும் சிற்றிலக்கிய நூல்களில், தனித்தனியாக, ஏழு செய்யுட்களில் கூறப்பட்டுள்ளன. இவ்வாறு, கோவை இலக்கியத்தின் விரிவிற்கு இச் செய்யுள், அடிப்படையாய் அமைந்திருப்பது, அறிதற்கு உரியது. இறையனார் களவியல் உரையாசிரியர், இச் செய்யுளை எடுத்துக் காட்டி, இவ் ஏழு வகை இடையூறுகளும் இவ் ஒரு செய்யுளில் அமைந்திருப்பதைக் குறிப்பிட்டுள்ளார்.[1]

மேலும், "கோழிலை வாழைக் கோண்மிகு பெருங் குலை" என்று தொடங்கும் அகநானூற்றுச் செய்யுள்[2] ஒன்றின் கருத்து, அவ்வாறே, "மையார் கதலி வனத்து" என்று தொடங்கும் திருக்கோவையார்ச் செய்யுள்[3] ஒன்றில் அமைந்திருப்பதும் இங்குக் குறிப்பிடத் தக்கது. இந் நூல்கள் இரண்டிலும் இச் செய்யுட்களுக்கு வரைவு கடாதல் என்றே, கருத்துக்

---

1. இறையனார் களவியல், நூற்பா, 30, உரை.
2. அகநானூறு, செய்யுள், 2.
3. திருக்கோவையார், செய்யுள், 262.

குறிப்பும் எழுதப் பெற்றுள்ளது. சங்க கால அகப் பொருட் செய்யுட்கள், கோவை இலக்கியச் செய்யுட்களுக்குப் பிறப்பிடமாகும் என்பதற்கு இது, தக்க சான்றாகும்.

## பிள்ளைத் தமிழ்

பிள்ளைத் தமிழ் என்னும் சிற்றிலக்கியத்தில், அம்புலிப் பருவம் என்னும் பகுதி, சிறப்பாகக் குறிப்பிடப் படுவதாகும். இது, திங்களை நோக்கி, அத்திங்களைத் தன் குழந்தையுடன் விளையாட வருமாறு, தாய் அழைப்பதாகப் பாடப் பெறுவது. இவ் அம்புலிப் பருவத்தின் அடிப்படைக் கூறு, அகநானூற்றில் உள்ளது. மாலைக் காலத்தில், தாய் ஒருத்தி, திங்களை நோக்கித் 'திங்களே! பொன்னாலாகிய தாலியினை அணிந்த என் மகனை நினைந்து, நீ இங்கு வந்தால், உனக்கும் பால் தருவேன்' என்று கூறுதல், அகநானூற்றுச் செய்யுள் ஒன்றில் காணப்படுகின்றது.[1] இது, அம்புலிப் பருவத்திற்குத் தோற்றுவாயாக அமைந்திருப்பது, அறிந்து இன்புறுதற்குரியது. (அம்புலி— திங்கள்.) பிள்ளைத் தமிழிற்கு ஏற்ற செய்திகள், கலித்தொகைச் செய்யுட்களில் அமைந்திருப்பது, பின்பு, கலித்தொகை பற்றிய பகுதியில் கூறப்படும்.

---

1. அகநானூறு, செய்யுள், 54.

# 3. நற்றிணை

இந் நூலில், கடவுள் வாழ்த்துச் செய்யுள் உட்பட, நானூற்றொரு ஆசிரியப் பாக்கள் உள்ளன. இந் நூற் செய்யுட்கள், ஒன்பது அடிச் சிற்றெல்லையும், பன்னிரண்டு அடிப் பேரெல்லையும் கொண்டவை. இவ் அடிகளின் எண் வரையறை, அகநானூற்றுச் செய்யுள் அடிகளினும் குறைந்தும், குறுந்தொகைச் செய்யுள் அடிகளினும் மிகுந்தும் உள்ளது. இந் நூல், ஏறத்தாழப் புலவர் பெருமக்கள் நூற்று எழுபத்தைவர் இயற்றிய செய்யுட்களின் தொகுப்பாகும். முடத்திருமாறன் இயற்றிய செய்யுட்கள் இரண்டு, இந் நூலில் உள்ளன.[1] இவன், இடைச் சங்கம் அழிந்த காலத்து வாழ்ந்தவன் என்று, இறையனார் களவியல் உரை கூறுகின்றது.

இந் நூலின் பெயரில், 'நல்' என்ற அடைமொழி சேர்ந்திருப்பது, இந் நூலின் சிறப்பிற்கு அறிகுறி என்பர். தொகை நூல்களுள், இந் நூல் ஒன்றற்கே இவ் அடைமொழியும், திணை என்பதும் சேர்ந்து, பெயராக அமைந்திருத்தல் குறிப்பிடத் தக்கது.

1. நற்றிணை, செய்யுள், 105, 228.

கடவுள் வாழ்த்து நீங்கலாக, இந் நூலில் உள்ள 400 செய்யுட்களில், குறிஞ்சித் திணை பற்றிய செய்யுட்கள் 131ம், பாலைத் திணை பற்றிய செய்யுட்கள் 106ம், நெய்தல் திணை பற்றிய செய்யுட்கள் 102ம், மருதத் திணை பற்றிய செய்யுட்கள் 32ம், முல்லைத் திணை பற்றிய செய்யுட்கள் 29ம் உள்ளன.

**கருத்து**

இந் நூலின் ஒவ்வொரு செய்யுளின் இறுதியிலும் அதன் கருத்து (கிளவி), எழுதப்பட்டுள்ளது. இதனை எழுதியவர் பெயர் தெரியவில்லை.

**உரைகள்**

இந் நூலிற்குப் பழைய உரை இல்லை. இவ் இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்த பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் அவர்கள், இந் நூலிற்கு விளக்கமான உரை எழுதியுள்ளார்கள். அவர்களுக்கு இந் நூலின் 234ஆம் செய்யுளும், 385 ஆம் செய்யுளின் பிற்பகுதியும் கிடைக்கவில்லை. ஆயினும், இறையனார் களவியல் உரையில் மேற்கோளாகக் காணப்பட்ட "சான்றோர் வருந்திய" என்னும் தலைப்பு உடைய செய்யுள், இந் நூலின் 234ஆம் செய்யுளாக இருக்கலாம் எனக் கருதி, அச் செய்யுளை இந் நூலிற் சேர்த்துச் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினர், 1969ல், பதிப்பித்துள்ளனர்.[1]

---

1. இந் நூலில், பக்கம், 36, வரி, 8-9ல், 'அந் நூலிற்கு உரை எழுதிய பின்னத்தூர் அ. நாராயணசாமி ஐயர் அவர்கள் கருதி' என இருப்பதனை, 'அந் நூலினைப் பதிப்பித்த சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினர் கருதி' எனத் திருத்திக் கொள்ளுதல் வேண்டும்.

ஔவை சு. துரைசாமிப் பிள்ளை அவர்கள், இந் நூலின் முதல் இருநூறு செய்யுட்களுக்கு எழுதிய விளக்கவுரை, 1966 ஆம் ஆண்டில் வெளிவந் துள்ளது.

**வரலாற்றுக் குறிப்புக்கள்**

ஆர்க்காடு,[1] பாரம்,[2] ஆரேறு,[3] இருப்பையூர்[4] முதலிய ஊர்களைப் பற்றிய குறிப்புக்களும், கடை எழு வள்ளல்களுள் இருவராகிய வல்வில் ஓரி என் பவனுக்கும், மலையமான் திருமுடிக்காரி என்பவ னுக்கும் நிகழ்ந்த போரில், ஓரியைக் காரி கொன்ற செய்தியும்[5] இந் நூலில் காணப்படுகின்றன.

இந்நூற் செய்யுள் ஒன்றில், "ஏதிலாளன் கவலை கவற்ற, ஒருமுலை அறுத்த திருமா வுண்ணி"[6] என இருக்கும் பகுதி, சிலப்பதிகாரத்தில் உள்ள கண்ணகி கதையைக் குறிக்கின்றது போலும் எனக் கருதுவர். இச் செய்யுளை இயற்றிய மருதனிளநாக னார், மதுரையைச் சேர்ந்தவராதலால், கண்ணகி வாழ்வில் மதுரையில் நிகழ்ந்த நிகழ்ச்சியை இது குறிக்கும் எனவும் எண்ணுவர்.

பல்வேறு நாடுகளிலிருந்து மரக்கலங்களின் வாயிலாக வந்த பண்டங்கள், கடற்கரையில்

---

1. நற்றிணை செய்யுள், 227.
2, 3. நற்றிணை, செய்யுள், 265.
4. நற்றிணை, செய்யுள், 260, 350.
5. நற்றிணை, செய்யுள், 320.
6. நற்றிணை, செய்யுள், 216.

இறக்கப்பட்டன எனப் பிற நாட்டு வாணிகம் பற்றிய குறிப்பு, இந் நூலில் காணப்படுகின்றது.[1]

**பழக்க வழக்கங்கள்**

தலைவனது தேரில் குதிரை பூட்டப்படுதலே அன்றிச் சிறுபான்மை கோவேறு கழுதை பூட்டப்படுதல்,[2] தன்னைப் பிரிந்து சென்ற காதலன் வருகையைப் பல்லி கூறுவதாகத் தலைவி நம்புதல்,[3] மகளிர், கால்பந்து விளையாடுதல்,[4] உழவர் மகளிர், கடகப் பெட்டியில் மலர்களை வைத்துக் கொண்டு விற்றுத் திரிதல்,[5] கழைக்கூத்து ஆடும் பெண்கள், கயிற்றில் நடத்தல்,[6] சிறுவர் தோளில் மாட்டிய சிறு பறையின் கண்ணில், குருவியின் ஓவியம் எழுதுதல்,[7] மூங்கில் குழாயில் கள்ளினை நிரப்பி முதிர வைத்து உண்ணுதல்,[8] திருவிழா நடக்கும் செய்தியைத் தெருக்கள்தோறும் சென்று, ஊர் மக்களுக்குக் குயவர் அறிவித்தல்[9] முதலிய பழக்க வழக்கங்கள், இந் நூலில் அறியப்படுகின்றன.

---

1. நற்றிணை, செய்யுள், 31.
2. நற்றிணை, செய்யுள், 278.
3. நற்றிணை, செய்யுள், 169, 333.
4. நற்றிணை, செய்யுள், 324.
5. நற்றிணை, செய்யுள், 97.
6. நற்றிணை, செய்யுள், 95.
7. நற்றிணை, செய்யுள், 58.
8. நற்றிணை, செய்யுள், 276.
9. நற்றிணை, செய்யுள், 200.

### சில செய்திகள்

யானைத் தந்தத்தில், முத்துக்கள் இருக்கும் என்னும் செய்தி[1] இந் நூலில் உள்ளது. ஆயிரத்து எண்ணூறு ஆண்டுகளுக்கு முற்பட்ட இந்நூற் செய்யுள் ஒன்றில், தெருக்கள், ஆறுகள் போல் அகலமாய் அமைந்திருந்ததாகக் கூறப்பட்டுள்ள செய்தி,[2] அமெரிக்க நாட்டில் இப்போது உள்ள மிக அகன்ற தெருக்களை நமக்கு நினைவூட்டுகின்றது.

### அறவுரைகளும், அறிவுரைகளும்

தக்க இடங்களில் அறவுரைகளும், அறிவுரைகளும் அமைந்துள்ள செய்யுட்கள் சிலவற்றை இந் நூலில் காணலாம். 'அரசனால் செய்யப் பெறும் சிறப்புக்களும், பிற செல்வங்களும் ஒருவனுடைய உண்மைச் செல்வங்கள் ஆகமாட்டா. இவை, ஒருவன், முன்பு செய்த வினைப்பயனால் அவனுக்குக் கிடைத்தவை ஆகும். சான்றோரால் உண்மைச் செல்வம் என்று கூறப்படுவது, தன்னைச் சார்ந்தவர்களின் துன்பத்தைப் போக்கி, அவர்களுக்கு அருள் செய்யும் உயர்ந்த பண்புடைமையே ஆகும்'.[3] என, இந் நூலில் உள்ள ஓர் அறவுரை, எக்காலத்திற்கும், எந்நாட்டினருக்கும் ஏற்புடையதாகும். இந் நூலில், மற்றொரு செய்யுளில், 'தலைவன், பிறருக்கு உதவி செய்யும் பேரருளுடன் பொருள் தேடச் செல்

1. நற்றிணை, செய்யுள், 202.
2. நற்றிணை, செய்யுள், 200.
3. நற்றிணை, செய்யுள், 210.

கின்றான்' எனக் குறிப்பிடப் பட்டுள்ளது.[1] 'பெரி யோர்கள், பிறர் தீமை செய்வதை நேரில் கண்ட போதும் அவர்கள்மீது சினம் கொள்ளாமல், தீமை செய்தவர்களே அக் குற்றத்தினை உணர்ந்து திருந்து வாராக என்று கூறிப் பொறுத்திருப்பர்' என்பது, இந் நூலில், வேறு செய்யுள் ஒன்றில் காணப்படு கின்றது.[2]

பழந்தமிழ் மக்கள், காதலினும் கடமைக்கு முதலிடம் அளித்தனர் என்பது பற்றிய குறிப்பு, இந் நூலில், சில இடங்களில் புலப்படுகின்றது. தலைவன், வினை செய்தற் பொருட்டுத் தலைவியைப் பிரிந்து செல்லத் தான் நினைப்பதைத் தோழியிடம் கூறினான். இதனைக் கேட்ட தோழி, தலைவனை நோக் கித் 'தலைவி, உம்மை விட்டுப் பிரிதலைச் சிறிதும் பொறாதவள். ஆதலால், நீர் செல்வீராக என்று சொல்வதற்கு அஞ்சுகின்றேன். செல்லாது இங்கே இருமின் என்று சொன்னால், பொருள் ஈட்டும் நற்செயலைத் தடுத்தலால் பலரும் கூறும் பழிமொழி வருமோ என அஞ்சுகின்றேன். எனவே, நீர் செல்வீ ராக; சென்று வினை முடிப்பீராக; சென்ற இடத்தில் நெடுங்காலம் தங்காமல் விரைவில் வருவீராக;' என்று கூறினாள். இக் கருத்து அமைந்த செய்யுள், இந் நூலில் உள்ளது.[3] இதன் வாயிலாகத் தலைவி யின் காதல் நிறைவு, அதனையும் கடந்து தலைவன்

---

1. நற்றிணை, செய்யுள், 186.
2. நற்றிணை, செய்யுள், 116.
3. நற்றிணை, செய்யுள், 229.

கடமையை நிறைவேற்றுதலின் இன்றியமையாமை, கடமை செய்யாதவரைப் பிறர் இகழ்ந்துரைத்தல் ஆகியவற்றைப் புலவர் புலப்படுத்தியிருப்பது, நல்ல பயன் தருவதாகும். இந்நூலில், மற்றொரு செய்யுளில், தலைவியைப் பற்றித் தலைவன் கூறும்போது, 'கருதிய செயலை முடித்தாற் போன்ற இனிமை உடையவள்' என்று கூறினான்[1] எனவும், வேறு செய்யுள் ஒன்றில், 'கருதிய செயலை முடித்தேமாயின், அன்றே வருவேம்' எனத் தலைவன் கூறினான்[2] எனவும் உள்ளன. இவைகளிலிருந்து கடமையை நிறைவேற்றுதலில், முன்னையோர் மேற்கொண்டிருந்த முதன்மை விளங்கும்.

உடல் இன்பம் பற்றிய நிலையில்லாத உறவினும் உயிரின் இயல்பாகிய இன்ப அன்பினைப் பற்றி நிற்கும் நிலையான உள்ளத்து உறவு சிறந்தது என்ற கருத்து, இந்நூற் செய்யுள் ஒன்றில்[3] கூறப்பட்டுள்ளது. தோழி, பிறர் ஒருவரும் அறியாமல் தலைவனுடன் தலைவியை ஒன்றுசேர்த்து வெளியூருக்கு அனுப்பும்போது, தலைவனை நோக்கி, 'உன் பிழைபடாத உறுதி மொழியைக் கேட்டுத் தெளிந்த இவள், உடல் தளர்ந்து முதுமை அடைந்தாலும் இவளைக் கைவிடாமல் பாதுகாப்பாயாக;' என்று

1. நற்றிணை, செய்யுள், 3. ''உள்ளிய வினைமுடித் தன்ன இனியோள்''

2. நற்றிணை, செய்யுள், 169. ''முன்னிய கடமைக் கனம் ஆயின் நன்னுதல் வருவம்''.

3. நற்றிணை, செய்யுள், 10.

கூறினள் என்பது, அச் செய்யுளின் பொருளாகும். ஆண்டு முதிர்ந்து உடல் தளரும்போது, உடலின் இளமைத் தோற்றப் பொலிவையும், இன்பப் பேற்றையும் அடிப்படையாகக் கொண்டு தோன்றும் காதல் உறவும் தளர்தல், மக்கள் இயல்பில் காணப் படுகின்றது. அதனைத் தலைவனுக்குத் தோழி சுட்டிக் காட்டும் வாயிலாக, மக்களின் நல்வாழ்விற்கு இன்றியமையாத உயிர்நிலைக் கருத்தினைப் புலவர், இச் செய்யுளில் அமைத்துள்ளார். இது, எல்லோரும் உணர்ந்து மேற்கொள்ளுதற்கு உரிய மிகச் சிறந்த அறிவுரையாகும்.

## உயர்ந்த குடும்பம்

இல்வாழ்வாள் ஒருத்தியின் உயர்ந்த பண்பு ஒன்றனைக் கூறுவதாக, இந்நூற் செய்யுள் ஒன்றில் உள்ள கருத்து, நாம் அறிதற்கு உரியது. தலைமகளின் இளமைக் காலத்தில், தேன் கலந்த பால் உணவைப் பொற்கலத்தில் ஏந்தி, அதனை உண்ணுமாறு, செவிலித்தாய், அவளை வேண்டுவாள். அப்போது, அவள், மறுத்து, அவ் உணவை உண்ணமல், இல்லத்தின் முற்றத்தில் உள்ள பந்தல்வரை பாய்ந்து ஓடுவாள். காலம் மாறியது. அவள், பின்பு, திருமணம் ஆகப் பெற்றுத் தான் விரும்பிய கணவனுடன் நல்வாழ்வு நடத்திக் கொண்டிருந்தாள். அவளது இல்லற வாழ்வினைக் காணுதற்குச் செவிலித்தாய், அவளது இல்லத்திற்குச் சென்றாள். அவள் நடத்திய இல்லறத்தின் சிறப்பினைக் கண்டு திரும்பிய செவிலி, தலைமகளின் நற்றாயிடம்,

பின் வருமாறு கூறினாள். "நம் மகளைத் தேன் கலந்த தீம்பால் உணவை உண்ணுக உண்ணுக என்று, முன்பு, நாம் வற்புறுத்தும் போதெல்லாம் உண்ணாமல், ஓடி விளையாடிக் கொண்டிருப்பாள். அவள், இப்போது, தன் கணவனது குடி, வறுமை அடைந்து விட்டது என உணர்ந்தும், உண்ண வேண்டிய காலத்தில் உண்ண இயலாமல், ஒரு பொழுது விட்டு ஒரு பொழுது உண்ண வேண்டிய நிலை இருந்தும் மன நிறைவுடன், தன் தந்தையின் வளமான உணவுப் பொருள்களையும் நினையாதவளாய் வாழ்கின்றாள். இத்துணை அறிவு முதிர்ச்சியும், மன உறுதியும் எவ்வாறு பெற்றாள்!" என்று கூறினாள்.[1] இதனால், செல்வக் குடியில் பிறந்த சேயிழை ஒருத்தி, தன் கணவன் வாழ்வே தன் வாழ்வு எனக் கொண்டு, அவன் அடையும் இன்ப துன்பங்களில், தானும் பங்கு கொள்ளும் நிலையும், அடிப்படை உணவிற்காக வருந்தும் மிகக் கொடிய வறுமை நிலையிலும் பெற்ற தந்தையின் உதவியையும் நாடாத உள்ளத் துணிவும் பெற்றிருந்தமையைக் காண்கின்றோம். இதுவே, உயர்ந்த கொள்கை பெற்ற குடும்பமாகும். இவளே, நல்லவர்கள் உள்ளங்களில் நலம்பெற மலரும் குறிக்கோள் நங்கை ஆவாள். இத்தகைய உண்மை அன்பினையும், இன்னலைத் தாங்கும் உறுதியினையும் காணும்போது, மக்கள், துன்பத்தை வெற்றி கொள்ளும் தூய பண்பினைக் கற்றுக் கொள்கின்றனர்.

---

1. நற்றிணை, செய்யுள், 110.

## அன்பின் ஆற்றல்

அன்பின் ஆற்றல் அழகாகக் கூறப்பட்டிருக்கும் செய்யுட்கள் சிலவற்றின் கருத்துக்களை, இனிக் காண்போம்.

தலைமகன், வினைவயிற் பிரிந்தான். அவன் குறித்த பருவத்தில் வாராமையினால், தலைமகள் வருந்தினாள். தோழி, அவளுக்கு ஆறுதல் கூறினாள். அப்பொழுது தலைமகள், "காதலன் வாராமையினால் நேரும் இறப்பிற்கு யான் அஞ்சவில்லை; இறந்து வேறு பிறப்பு அடைந்தால், அப் பிறப்பில், என் தலைவனை மறந்து விடுவேனோ என்பதற்கு அஞ்சுகின்றேன்" என்று கூறினாள். இக் கருத்து அமைந்த செய்யுள்,[1] இந் நூலில் உள்ளது. இச் செய்யுள், தலைமகளின் அன்பு முதிர்ச்சிக்கு நல்லதோர் எடுத்துக்காட்டாகும்.

"என் நெஞ்சம், தலைவியின் கையகத்தது; அவள் இரக்கம் உற்று அதனை விட்டாலன்றி, அது, பிறரால் விடுவித்தற்கு இயலாதது;" எனத் தலைவன், தன்

---

1. நற்றிணை, செய்யுள், 397.

"துறக்கப் படாத உடலைத் துறந்துவெந் தூதுவரோடு
இறப்பன் இறந்தால் இருவிசும்பு ஏறுவன் ஏறிவந்து
பிறப்பன் பிறந்தால் பிறையணி வார்சடைப்
பிஞ்ஞகன்பேர்
மறப்பன்கொ லோஎன்றுஎன் உள்ளம் கிடந்து
மறுகிடுமே"

என்னும் திருநாவுக்கரசர் தேவாரத்தில், இறைவனிடத்து உள்ள பேரன்பில், இக் கருத்து அமைந்திருப்பது, அறிந்து இன்புறுதற்கு உரியது.

பாங்கனிடம் கூறியதாக, இந்நூற் செய்யுள் ஒன்று[1] உள்ளது. இது, தலைவனது அன்பின் வலிமையை அறிவிப்பதாகும்.

தலைமகள், தன் பெற்றோருக்குத் தெரியாமல், தன் தோழியின் உதவியினால், தலைவனுடன், அவனது ஊருக்குச் செல்லுதல், உடன்போக்கு என்று சொல்லப்படும். அவ்வாறு சென்றபின், அதனை அறிந்த தாய், மிகவும் வருந்துவாள். இக் கருத்து அமைந்தனவாக, இந் நூலில், சில செய்யுட்கள் உள்ளன. இவை, தாய் அன்பின் தனித் தன்மையினைப் புலப்படுத்துவனவாகும்[2].

பிள்ளைகளை ஈன்று அவற்றைக் காவல் செய்திருக்கும் பெண் புறவிற்கு உணவாக, நெல்லைக் கொண்டுவரும் ஆண் புறவின் அன்பும்,[3] குட்டிகளை அணித்தாக ஈன்ற பெண் புலி, பசியால் வருந்தியதாக, அதனை அறிந்த ஆண் புலி, அதற்கு உணவாக, யானையைக் கொல்லும் செயலும்,[4] புலியுடன் போர் செய்ததனால் இரத்தம் தோய்ந்த மருப்புடைய ஆண் யானை, தன் கன்றுடன், இளம் பெண் யானையையும் தன் கையினால் அணைத்துக் கொண்டு, வேங்கை மரத்தின் அடியை முறித்து, அம் மரத்தின் பூங்கொத்துக்களைக் கன்றுக்கும், பெண் யானைக்கும் ஊட்டும்

---

1. நற்றிணை, செய்யுள், 95.
2. நற்றிணை, செய்யுள், 143, 179, 184.
3. நற்றிணை, செய்யுள், 384.
4. நற்றிணை, செய்யுள், 383.

செயலும்[1] இந் நூலில் கூறப்பட்டுள்ளன. இதனால், மக்களது அன்பு வாழ்க்கையினைக் கூற நினைத்த புலவர்கள், பறவைகள், விலங்குகள் ஆகியவற்றின் அன்பு வாழ்க்கையினையும் எடுத்துக் காட்டி, அன்பின் விரிந்த நிலையினை விளக்கியுள்ளார்கள் என்பது அறியப்படும். தலைவி, புன்னை மரத்தினைத் தன் உடன் பிறப்பாக எண்ணிய செய்தி, இந் நூலில் காணப்படுகின்றது[2]. இதனால், அக்காலத் தமிழ் மக்கள், மரம் முதலிய ஓரறிவுயிரையும் உடன் பிறந்ததாக எண்ணி வாழ்ந்த உயர்ந்த தன்மை விளங்கும்.

**உவமைகள்**

இந் நூலில் காணப்படும் உவமைகள், பொருத்தமும், நயமும் உடையவை. உவமைக்குச் சில எடுத்துக்காட்டுக்கள் வருமாறு:-

தலைவன் ஒருவன், பொருள் தேடுதற்குத் தன் மனைவியை விட்டுப் பிரிந்தான். நடுவழியில் சென்றவுடன் அவன் மனம், மனைவியை நினைந்து, அவளது பிரிவுத் துன்பத்தினைத் தீர்த்தற்கு அவள்பால் செல்லக் கருதியது. உடனே அவனது அறிவு, மேற்கொண்ட கடமையாகிய பொருள் தேடுதலை முடிக்காமல் இடையில் விடுதல், அறியாமையையும், இழிவையும் தரும்; ஆதலால், அவள்பால் செல்லுதற்கு விரையாதே; என்று உணர்த்தியது. இவ்வாறு,

1. நற்றிணை, செய்யுள், 202.
2. நற்றிணை, செய்யுள், 172.

மனமும், அறிவும் ஒன்றற்கொன்று மாறுபட்ட நிலையில், அவன் உடல் மெலிந்தது; அந் நிலையில், தேய்ந்த புரியை உடைய பழைய கயிற்றின் இரண்டு பக்கத்தினையும் இரண்டு ஆண் யானைகள் மாறுகப் பற்றி இழுத்தால், அக் கயிறு, எளிதில் இற்றுவிடுதல் போல, என் மனம் ஒரு பக்கத்திலும், என் அறிவு மற்றொரு பக்கத்திலும் இழுத்தலால், இவற்றினிடையே வருந்துகின்ற என் உடலும் விரைவில் அழிய வேண்டுவதுதானே என்று தலைவன் வருந்தினன்.[1] இவ் உவமை, மிகவும் சுவையுடையது; இதனைக் கூறியதனால், இச் செய்யுளை இயற்றிய புலவர், தேய்புரிப் பழங் கயிற்றினர் என்றே பெயர் வழங்கப் பெற்றார். இவரது இயற்பெயர், மறைந்துவிட்டது.

ஒருவருக்கு நேரும் துன்பத்தினை மற்றொருவர், தாமாக விரைந்து விலக்கி உதவுதற்குக் கண்ணிற்கு நேரும் துன்பத்தினைக் கை, தானாக விரைந்து நீக்குதல், உவமையாக, ஒரு செய்யுளில் கூறப்பட்டிருப்பது, அறிந்து இன்புறுதற்குரியது.[2] காய்களை உடைய கொன்றை மரத்திற்கு நீண்ட சடையை உடைய தவ முனிவர், உவமையாக, மற்றொரு செய்யுளில் கூறப்பட்டுள்ளனர். இங்கே கொன்றைக்

---

1. நற்றிணை, செய்யுள், 284.
2. ''கண்ணூறு விழுமம் கைபோல் உதவி
நம்முறு துயரம் களையார்''
(நற்றிணை, செய்யுள், 216.)

காயைத் தவமுனிவர் சடைக்கு உவமையாகக் கூறி யிருப்பது[1] மிகவும் பொருத்தமானது.

குவிந்த நிலையில் உள்ள ஆம்பல் மலர்கள், மலர்ந்து தோன்றும் தாமரை மலர்களைச் சுற்றிக் காட்சி அளிக்கின்றன. அப்போது, காற்று, விரைவாக வீசுகின்றது. அக்காற்றினுல், ஆம்பல் மலர்கள், தாமரை மலரினிடத்தே வந்து சாய்கின்றன. இக்காட்சி. தாமரை மலரை ஆம்பல் மலர்கள் வணங்குவது போல் இருக்கின்றது. இதனைக் கண்ட புலவர் ஒருவர், அரசன் மகள் சினங் கொண்டபோது, அங்குத் தோழியர் கூட்டம் கைதொழுது நிற்கும் நிலையினை, இதற்கு உவமையாகக் கூறியுள்ளார்.[2] சேற்றின்கண் உள்ள மீனை அருந்துதற்கு நாரைக் கூட்டம், குவிந்த மணல் மேட்டில் ஏறியிருக்கும் காட்சியினைக் கண்ட மற்ெெரு புலவர், அரசருடைய காலாட்படையின் கூட்டம், பகைவர்பால் பெறும் வெற்றியை எண்ணி அணிவகுத்திருத்தலை, இதற்கு உவமையாகக்[3] கூறியுள்ளார்.[4] இவ் உவமைகள் இரண்டிலும் அமைந்த கற்பனைகள், அழகாக உள்ளன.

---

1. நற்றிணை, செய்யுள், 141.
2. நற்றிணை செய்யுள், 300.
3. காலாட்படை, தலையில் வெண்ணிறம் உள்ள ஆடை அணிந்து செல்லுதல், அக்கால வழக்கம் என்பர். ஆதலால், இதனை வெண்மை நிறம் உடைய நாரைக்கு உவமை கூறியிருப்பது, பொருத்தமாக உள்ளது.
4. நற்றிணை, செய்யுள், 291.

யானைக் கன்றின் சிறிய காதிற்கு நெய்தற் கொடியின் இலையும்,[1] ஆண் யானையின் பெரிய காதிற்குத் தாமரையின் இலையும்[2] உவமைகளாக, இந் நூலில் கூறப்பட்டுள்ளன. நெய்தல் இலை, சிறிய வடிவினது. தாமரை இலை, அதனினும் பெரியது. காதின் சிறுமை பெருமை வேறுபாட்டிற்கு ஏற்பச் சிறிய இலை ஒன்றினையும், பெரிய இலை ஒன்றினையும் புலவர்கள், உவமை கூறியிருப்பது, பாராட்டுதற்கு உரியது.

**கற்பனை**

இவ்வாறு, உவமைகளில் மட்டுமன்றிப் பிற வகைகளிலும் புலவர்களின் கற்பனைத் திறன்களைக் காணலாம். நெஞ்சினைத் தனியாகப் பிரித்து, அது பேசுதல் போலவும், செயல் புரிதல் போலவும் பல வாறுகக் கற்பனை செய்தல், இலக்கிய மரபாகும். இத் தகைய செய்யுட்களில் அமைந்திருக்கும் கற்பனை, படிப்போருக்கு மிக்க இன்பத்தினை உண்டாக்கும். தலைவன் பிரிந்தபோது வருந்தும் தலைவிக்குத் தோழி ஆறுதல் கூறினாள். அது கேட்டு, அவளை நோக்கிச் சொல்லுந் தலைவி, தன் நெஞ்சினைப் பற்றிக் கூறியதாக, இந்நூற் செய்யுள் ஒன்று[3] உள்ளது. "என் நெஞ்சம், நான் படும் துயரத்தினைக் கண்டு, அதனை அவருக்கு அறிவுறுத்தச் சென்று, அவர்

---

1. நற்றிணை, செய்யுள், 47.
2. நற்றிணை, செய்யுள், 310.
3. நற்றிணை, செய்யுள், 56.

செய்யும் தொழிலுக்குச் சூழ்ச்சி சொல்லும் துணையாய் இருந்து, அத்தொழிலினை முடித்து, அவருடன் ஒருங்கு வருதற்கு விரும்பி, அங்கு வருந்தி இருக்கின்றதோ! அன்றேல், அவர் அருள் செய்யாமையினால் கலங்கி இங்கு வந்து, தலைவன் என்னைப் பிரிதற்கு முன்பு இருந்த என் அழகு கெட்டதனால் தோன்றிய என் பசலை நிறத்தினை நோக்கி, அதனால், என்னை அறிந்துகொள்ள இயலாமல், இவள் யாரோ அயலாள் என்று வருந்தி, என்னைத் தேடித் திரும்பிப் போய்விட்டதோ! அறியேன். ஆதலால், யான் எவ்வாறு ஆற்றுவேன்;" என்று கூறினளாம். பிரிவு ஆற்றாத தலைவி ஒருத்தியின் மனநிலையினை விளக்குதற்குப் புலவர் மேற்கொண்ட இக் கற்பனை, இன்பந் தருவதாக உள்ளது.

## தூது

தலைவனைப் பிரிந்த தலைவி, குருகு[1] கிளி[2] இவற்றை அவனிடத்துத் தூது விடுவதாக அமைந்த செய்யுட்கள், இந் நூலில் உள்ளன. நண்டினைத் தூது விடுதல் உண்டு என்பது, அகநானூற்றுச் செய்யுள் ஒன்றினால்[3] அறியப்படுவதும் இங்கு நினைக்கத் தக்கது. தூது முனிவின்மை என்னும் மெய்ப்பாடு ஒன்று, தொல்காப்பியத்தில் காணப்படுகின்றது. இவை, தூது விடும் வழக்கம் தொன்மை

---

1. நற்றிணை, செய்யுள், 54, 70. (குருகு—நாரை)
2. நற்றிணை, செய்யுள், 102.
3. அகநானூறு, செய்யுள், 170.

யானது என்பதற்குச் சான்றுகளாகும். தூது விடும் இம் முறை, பிற்காலத்தில், தூது என்னும் சிற்றிலக்கியம் தோன்றுதற்கு வழிகாட்டியாய் அமைந்தது என்னலாம். எனவே, தமிழ் மொழியில் உள்ள தூது இலக்கியம், பிற மொழித் தூது இலக்கியத்தினைப் பின்பற்றித் தோன்றியது என்னும் கருத்துப் பொருந்துவதன்று.

# 4. குறுந்தொகை [1]

இந் நூலில், கடவுள் வாழ்த்துச் செய்யுள் உட்பட, நானூற்றிரண்டு ஆசிரியப்பாக்கள் உள்ளன. இந்நூற் செய்யுட்கள், நான்கு அடிச் சிற்றெல்லையும், எட்டு அடிப் பேரெல்லையும் கொண்டவையாகும். ஆனால், இவற்றுள், 307, 391 ஆம் செய்யுட்கள் இரண்டும் ஒன்பது அடிகளுடன் காணப்படுகின்றன. 391 ஆம் செய்யுள், எட்டு அடிச் செய்யுளாகவும் சில ஏடுகளில் உள்ளது என்பர். ஆதலால், ஒன்பது அடிகளை உடைய 307 ஆம் செய்யுளை விலக்கிவிட்டால், கடவுள் வாழ்த்து நீங்கலாக, இந் நூலின் செய்யுட்கள், 400 என்று கொள்ளலாம்.

---

1. இக் குறுந்தொகை, அகநானூற்றிலும், நற்றிணையிலும் உள்ள செய்யுட்களின் அடிகளினும் குறைந்த எண் அளவு உள்ள அடிகளை உடைய செய்யுட்களைக் கொண்டது. திருநாவுக்கரசர் தேவாரத்தில், ஐந்தாம் திருமுறையில் உள்ள பதிகங்களுக்குத் திருக்குறுந்தொகை என்ற பெயர் உள்ளது. இப் பதிகச் செய்யுட்கள், குறைந்த எண் அளவு உள்ள எழுத்துக்களைத் தம் அடிகள் கொண்டமையினால், இப் பெயர் பெற்றன என்பர்.

"நன்றே" என்று தொடங்கும் செய்யுள் ஒன்றைக் குறுந்தொகைச் செய்யுள் என்று, நச்சினார்க்கினியர், கலித்தொகை உரையில்[1] குறிப்பிட்டுள்ளார். ஆனால், இச் செய்யுள், குறுந்தொகைப் பதிப்பில் இல்லை.

இக் குறுந்தொகை, 200க்கு மேற்பட்ட புலவர் பெருமக்கள் இயற்றிய செய்யுட்களின் தொகுப் பாகும்.[2] இவர்களுள், குறுந்தொகையில் மட்டும் உள்ள செய்யுட்களை இயற்றிய புலவர்கள், நூற்றிரு பத்து மூவர் என்பர்.[3] ஏனையோர் இயற்றிய செய் யுட்கள், பிற தொகை நூல்களிலும் உள்ளன.

## முதல் தொகை நூலா?

இயற்பெயர் அறியப்பட்ட புலவர் சிலரும், இயற்பெயர் அறியப்படாத புலவர் சிலரும் சிறப்புப் பெயர் பெறுதற்குக் காரணமான தொடர் களையேனும், கருத்துக்களையேனும் கொண்ட செய்

1. கலித்தொகை, செய்யுள், 38, உரை.
2. இந் நூலின் இறுதியில், இத் தொகை பாடிய கவிகள், இருநூற்று ஐவர் என்பது காணப்படுகின்றது. ஆயி னும், பத்துச் செய்யுட்களைப் பாடிய ஆசிரியர் பெயர், ஏடுகளில் இல்லை என்றும், இப்பொழுது கிடைத்த அளவில், இருநூற்று ஆறு பெயர்கள் காணப்படு கின்றன என்றும் கூறுவர்.
(குறுந்தொகை, டாக்டர், உ. வே. சாமிநாதையர் அவர்களின் முகவுரை, பக்கம், 12.)
3. குறுந்தொகை, இரண்டாம் பதிப்பின் முகவுரை, பக்கம், 2.

யுட்கள், இக் குறுந்தொகையில், பல உள்ளன. இவ்வாறு, இப் புலவர்கள் பெற்ற சிறப்புப் பெயர்களே, பிற தொகை நூல்களிலும் அப் புலவர்களின் பெயர்களாகக் காணப்படுகின்றன. ஆதலால், இக் குறுந்தொகை, எட்டுத்தொகை நூல்களுள், முதலில் தொகுக்கப்பட்டதாக இருக்கலாம் என்று அறிஞர் கருதுவர்.[1] இனி, எட்டுத்தொகை நூல்களுள், முதலில் தொகுக்கப்பட்டது அகநானூறு என்றும், ஐங்குறுநூறு என்றும், புறநானூறு என்றும் வேறு வேறு கருத்து உடையவர்களும் உண்டு.

**திணை**

டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்கள், 1937ஆம் ஆண்டில், தாம் வெளியிட்ட இந் நூல் பதிப்பில், இந்நூற் செய்யுட்களுக்கு எக்காரணத்தினாலோ திணை குறிப்பிடவில்லை. வித்துவான் சோ. அருணசல தேசிகர், அவர்கள் 1933 ஆம் ஆண்டில், தாம் வெளியிட்ட இந்நூல் பதிப்பில், இந்நூற் செய்யுட்களுக்குத் திணை குறிப்பிட்டுள்ளார்கள். அம் முறைப்படி பார்க்கும்போது, குறிஞ்சித் திணையில், 146 செய்யுட்களும், பாலைத்

---

1. குறுந்தொகைச் செய்யுட்கள் இயற்றப்பட்ட காலத்தினைக் கி. பி. முதல் அல்லது இரண்டாவது நூற்றாண்டாகக் கருதலாம் என்பதும், குறுந்தொகை தொகுக்கப் பெற்ற காலம், கி. பி. நான்காம் நூற்றாண்டின் பிற்பகுதி என்பதும் பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளை அவர்களின் கருத்துக்களாம். (இலக்கிய தீபம், பக்கம், 103, 107.)

திணையில், 93 செய்யுட்களும், நெய்தல் திணையில், 70 செய்யுட்களும், மருதத் திணையில், 48 செய்யுட்களும், முல்லைத் திணையில், 44 செய்யுட்களும் இந் நூலில் உள்ளன,

**கருத்து**

இந் நூலின் ஒவ்வொரு செய்யுளின் இறுதியிலும் அதன் கருத்து (கிளவி), எழுதப்பட்டுள்ளது. சில செய்யுட்களுக்கு இரண்டு கருத்துக்களும் இருக்கின்றன. இக் கருத்துக்களை, இந்நூலினைத் தொகுத்தவரேனும், பிற்காலத்தவரேனும் அமைத்திருத்தல் வேண்டும். இளம்பூரணர் முதலிய பழைய உரையாசிரியர்கள், இந்நூற் செய்யுட்களை மேற்கோளாகத் தாம் எடுத்துக்காட்டும் இடங்களில், சில செய்யுட்களுக்கு இப் பழைய கருத்துக்களைக் கூருமல், வேறு கருத்துக்களைக் கூறியுள்ளனர். சில செய்யுட்களுக்கு இரண்டாவதாக, எழுதப்பட்ட கருத்துக்களும், சில செய்யுட்களுக்குப் பழைய உரையாசிரியர்கள் எழுதியுள்ள கருத்துக்களும் பிறவற்றை விடப் பொருத்தமாக உள்ளன.

**உரைகள்**

இந் நூலின் செய்யுட்களில் இருபது செய்யுட்கள் நீங்கலாகப் பிறவற்றிற்குப் பேராசிரியர்[1]

1. குறுந்தொகைக்குப் பேராசிரியர் உரை எழுதிய செய்தி, தொல்காப்பியத்தில், நச்சினர்க்கினியர் உரையில் தெரிகின்றது. (தொல்காப்பியம், பொருளதிகாரம், அகத்திணையியல், நூற்பா, 46, உரை.)

என்பார், உரை எழுதினார் என்றும், அவ் இருபது செய்யுட்களுக்கும் நச்சினார்க்கினியர், உரை எழுதினார் என்றும் கூறுவர். இவ் உரைகள், இப்போது கிடைக்கவில்லை. பின்னர்த் திருக்கண்ணபுரத் தலத்தான் திருமாளிகைச் சௌரிப் பெருமாள் அரங்கனார் என்பவர், 1915 ஆம் ஆண்டில், இந் நூலிற்கு உரை எழுதி வெளியிட்டார். அடுத்து, டாக்டர், உ. வே. சாமிநாதையர் அவர்கள், 1937 ஆம் ஆண்டில், தெளிவான உரை எழுதி வெளியிட்டார்கள். பின்பு, மகாவித்துவான் ரா. இராகவையங்கார் அவர்கள், கடவுள் வாழ்த்து உட்பட, முதல் 112 செய்யுட்களுக்கு எழுதிய விளக்க உரை, குறுந்தொகை விளக்கம் என்னும் பெயருடன், 1947 ஆம் ஆண்டில், அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தினால் வெளியிடப்பட்டது.

## செய்யுட்களின் மேற்கோள் ஆட்சி

தொல்காப்பியம் முதலிய இலக்கண நூல்களின் உரைகளிலும், சிலப்பதிகாரம் முதலிய இலக்கிய நூல்களின் உரைகளிலும் உரையாசிரியர்கள் மேற்கோளாகக் காட்டியுள்ள எட்டுத்தொகைச் செய்யுட்களுள், இக் குறுந்தொகைச் செய்யுட்களே, மிகுதியாக உள்ளன. இப்போது தெரிந்த வரையில், இந் நூலில் உள்ள 165 செய்யுட்களே, பிற நூல்களின் உரைகளில், மேற்கோளாக எடுத்துக்காட்டப் பெறாதவை என்பர்.[1] செய்யுட்களில் கூறப்பட்டுள்ள

1. குறுந்தொகை, டாக்டர், உ. வே. சாமிநாதையர் அவர்களின் முகவுரை, பக்கம், 13.

செய்திகளின் செறிவும், அடி எண் அளவுகளின் குறுமையும் மிகுதியான மேற்கோள் ஆட்சிக்குக் காரணங்கள் ஆகலாம்.

## கடவுள் வாழ்த்துச் செய்யுள்

இந் நூலின் கடவுள் வாழ்த்தாக அமைந்த "தாமரை புரையும் காமர் சேவடி" என்று தொடங்கும் செய்யுள், சொற்சுவை, பொருட்சுவை செறிந்தது. யாப்பருங்கலககாரிகை உரையாசிரியராகிய குணசாகரர், இச் செய்யுளினை, எல்லாக் குற்றமும் தீர்ந்த செய்யுளுக்கு எடுத்துக்காட்டாகக் குறிப்பிட்டுள்ளார்.[1]

## வரலாற்றுக் குறிப்புக்கள்

எவ்வி,[2] அகுதை,[3] அதிகன்,[4] கட்டி,[5] வடுகர்,[6] கோசர்,[7] தொண்டையர்,[8] கொங்கர்[9] முதலியவர்

---

1. இச் செய்யுளின் சொற் பொருட் சிறப்பினை, மகாமகோபாத்தியாய, பண்டிதமணி, மு. கதிரேசச் செட்டியார் அவர்கள், குறுந்தொகை மாநாட்டில் நிகழ்த்திய தலைமையுரையில் காணலாம். (குறுந்தொகைச் சொற்பொழிவுகள், பக்கம், 8—12.)
2. குறுந்தொகை, செய்யுள், 19.
3. குறுந்தொகை, செய்யுள், 298.
4. குறுந்தொகை, செய்யுள், 393.
5. குறுந்தொகை, செய்யுள், 11.
6. குறுந்தொகை, செய்யுள், 11.
7. குறுந்தொகை, செய்யுள், 15. இக் கோசர்களைப் பற்றி, மகாவித்துவான் ரா. இராகவையங்கார் அவர்கள் எழுதிய கோசர் என்னும் பெயர் உடைய தனி நூல் ஒன்று, அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தினால் வெளியிடப் பெற்றுள்ளது.
8. குறுந்தொகை, செய்யுள், 260.
9. குறுந்தொகை, செய்யுள், 393.

களைப் பற்றிய வரலாற்றுக் குறிப்புக்கள், இந் நூலில் உள்ளன. ஆதிமந்தியைப் பற்றிச் சிலப்பதிகாரத்தில் காணப்படும் வரலாற்றிற்கு உரிய செய்திக் குறிப்பு, இந் நூலின் 31 ஆம் செய்யுளில் உள்ளது என்பர். பொன் வளம் நிறைந்ததும், சோணை ஆற்றின் கரையில் இருந்ததும், பேரரசர்களது தலை நகரமாக விளங்கியதும் ஆகிய பாடலிபுத்திர நகரைப்[1] பற்றிய குறிப்பு, இந் நூலில் காணப்படுகின்றது.[2] பாடலிபுத்திர நகரம், சோணை ஆற்றின் கரையில் நிருமிக்கப் பட்டிருந்தது என்பதும், வரலாற்று ஆசிரியர்களால், நெடுங்காலம் அறியப்படாமல் இருந்ததோர் உண்மையாகும். இக் குறிப்பு, இந் நூலில் காணப்படுவது, அறிந்து இன்புறத் தக்கது.

**பழக்க வழக்கங்கள்**

இந் நூலில், பிறை தொழுதல்,[3] முதியோர் சென்று மணம் பேசுதல்,[4] முரசு முழங்கவும், சங்கு ஒலிக்கவும் மணம் புரிதல்,[5] சிறுவர் கழுத்தில் புலிப்பல் கோத்த தாலி அணிதல்[6] முதலிய பழக்க வழக்

---

1. பாடலிபுத்திர நகரம், இப்போது பாட்னு என்று வழங்கப்படும் நகருக்கு அண்மையில் இருந்தது என்பர்.
2. குறுந்தொகை, செய்யுள், 75.
3. குறுந்தொகை, செய்யுள், 178, 307.
4. குறுந்தொகை, செய்யுள், 146.
5. குறுந்தொகை, செய்யுள், 15.
6. குறுந்தொகை, செய்யுள், 161.

கங்கள் அறியப்படுகின்றன. மகளிர், உரலில், நெல் முதலியவற்றை உலக்கையால் குற்றும்போது, அத ஞல் ஏற்படும் சோர்வு தோன்ருமல் இருப்பதற்கு ஒரு வகை இசைப் பாட்டினைப் பாடும் வழக்கம் உண்டு. இவ்வாறு பாடுவோர், தம் அன்பிற்கு உரிய தலைவரை, இப் பாட்டின் தலைவராக வைத்துப் பாடுதல் மரபாகும்.[1] இக் குறிப்பு, இந் நூலில்[2] காணப்படுகின்றது. இப் பாட்டு, வள்ளைப் பாட்டு[3] என்று கூறப்படும். இதனை, உரல் பாட்டு என்றும், உலக்கைப் பாட்டு என்றும் கூறுவர். அக் காலத்தில், ஓந்தி நிமித்தம் பார்க்கும் வழக்கம் உண்மை, இந்நூற் செய்யுள் ஒன்றிஞல் தெரிகின்றது. அச் செய்யுளில், நிமித்தம் என்பது, புள் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.[4] இதனை நோக்கும்போது, தொடக்கக் காலத்தில், பறவைகளால் நிமித்தம் பார்க்கும் வழக்கம் இருந்தமையின், பறவை

1. ‘‘பொன்ஞர மார்பில் புனைகழற்கால் கிள்ளிபேர்
உன்னேன்என்று ஊழ்உலக்கை பற்றினேற்கு—
அன்ஞே
மனஞெடு வாயெல்லாம் மல்குநீர்க் கோழிப்
புனல்நாடன் பேரே வரும்’’ என்னும் முத்தொள்ளாயிரச் செய்யுள், இம் மரபினைப் பின்பற்றித் தோன்றிய அருமையான செய்யுளாகும்.

2. குறுந்தொகை, செய்யுள், 89.

3. வள்ளைப் பாட்டினைப் பற்றிய குறிப்புக் கலித்தொகையிலும் (செய்யுள். 42.) மலைபடுகடாத்திலும் (அடி, 342.) உள்ளது.

4. குறுந்தொகை, செய்யுள், 140.

யைக் குறிக்கும் புள் என்னும் பெயரினால், நிமித்தம் என்பது வழங்கப் பெற்றுப் பின்பு, வேறு பல வகை நிமித்தங்களுக்கும் அப் புள் என்பது, பெயராக வழங்கலாயிற்று என்பது தோன்றுகின்றது.

## சில செய்திகள்

மகளிர் கூந்தலிற்கு இயற்கை மணம் உண்டு என்னும் செய்தியினை எடுத்துக் கூறும் "கொங்குதேர் வாழ்க்கை அஞ்சிறைத் தும்பி" என்று தொடங்கும் இறையனார் செய்யுள்,[1] இந் நூலில் உள்ளது.[2] சிறந்த மகளிர், ஆடவர் ஆகியோர் உடல்களில், நல்ல மலர்களின் மணம், இயல்பாகவே கமழும் என்பது பற்றிய குறிப்புக்களும் இந் நூலில் காணப்படுகின்றன.[3] மகளிர், பன்னிரண்டு திங்கள்

---

1. இச் செய்யுளிற்குக் குறுந்தொகை உரையில், ஒரு வகையாகவும், இறையனார் களவியல் உரையில், மற்றொரு வகையாகவும் கருத்துக் குறிப்புக் கூறப் பெற்றுள்ளது. இச் செய்யுளை இயற்றியவர், இறைவன் அல்லர்; இறையனார் என்னும் பெயர் சிறந்த ஒரு தமிழ்ப் புலவர் என்பர், பேராசிரியர், எஸ். வையாபுரிப் பிள்ளை அவர்கள். (இலக்கிய தீபம், பக்கம், 86.) இச் செய்யுளின் சொற்சுவை பொருட்சுவைகளை விளக்கிப் பேராசிரியர், டாக்டர், மு. வரதராசனார் அவர்கள் எழுதிய கொங்குதேர் வாழ்க்கை என்னும் பெயர் உடைய தனி நூல் ஒன்று உள்ளது.
2. திருவிளையாடற் புராணத்தில் காணப்படும் தருமிக்குப் பொற்கிழி அளித்த படலம், இச் செய்யுளை அடிப்படையாகக் கொண்டது.
3. குறுந்தொகை, செய்யுள், 62, 84, 168, 193.

கருவுற்றிருப்பர் என்னும் செய்தி, இந் நூலில் கூறப்பட்டுள்ளது.[1] கணந்துள், மகன்றில் ஆகிய பறவைகளைப் பற்றிய குறிப்புக்கள், இந் நூலில் உள்ளன. இவற்றுள், கணந்துள் என்னும் பறவை, மலை வழியில் செல்வோரைத் துன்புறுத்துகின்ற ஆறலை கள்வர்கள் அவ் வழியில் இருப்பதைத் தம் ஒலியினால் அறிவித்து, வழிச் செல்வார்க்கு உதவி செய்யும் என்பதும்[2] மகன்றில் என்னும் நீர்வாழ் பறவை, ஆணும் பெண்ணும் பிரிவின்றி இணைந்து வாழும் இயல்புடையது என்பதும்[3] கூறப்பட்டுள்ளன.

## உழைப்பின் உயர்வு

"வினையே ஆடவர்க்கு உயிரே"[4] என்னும் அருமையான பகுதி, இந் நூலில் உள்ளது. உடல் உள்ள வரையும் ஆண்மக்கள், முயற்சி உடையராய் இருத்தல் வேண்டும் என்பது, இதன் கருத்தாம். இதனால், அக் கால மக்கள், உழைப்பிற்குக் கொடுத்த உயர்வினை அறியலாம். தலைவன், தலைவியை விட்டுப்

---

1. குறுந்தொகை, செய்யுள், 287. இச் செய்யுளை இயற்றிய கச்சிப்பேட்டு நன்னாகையார், பெண்பாற் புலவர் என்று, டாக்டர், உ. வே. சாமிநாதையர் அவர்கள் எழுதியிருப்பதும் நினைக்கத் தக்கது. "பன்னிரு திங்கள் வயிற்றிற் கொண்டவப் பாங்கினால்" எனப் பெரியாழ்வாரும் கூறியுள்ளார். (பெரியாழ்வார்; 3,2.8.)
2. குறுந்தொகை, செய்யுள், 350.
3. குறுந்தொகை, செய்யுள், 57.
4. குறுந்தொகை, செய்யுள், 135.

பிரியும் பிரிவுகளில், பொருள்வயிற் பிரிவே, தமிழ் இலக்கியங்களில், மிகுதியாகக் காணப்படுகின்றது. இதற்குக் காரணம், தாமே உழைத்துத் தேடிய பொருள் உடையவர்களே, தாம் இன்பம் நுகர் தற்கும், பிறருக்கு வழங்குதற்கும் உரியவர்கள் எனக் கருதியமையே ஆகும். மேலும், தம் முன்னோர் கள் தேடிய பொருளைச் செலவழிப்போர், இழிந்த நிலையில் கருதப்பட்டனர்.[1] இக்குறிப்பும் இந் நூலில், காணப்படுகின்றது. இரப்போர், தம்மிடத்து வாராத நாட்களைத் தமிழ் மக்கள், பயனற்ற நாட் களாகக் கருதினர் என்னும் குறிப்பும் இந் நூலில் உள்ளது.[2] இல்வாழ்வார்க்கு இன்றியமையாத இத்தகைய செய்திகளை உரிய இடங்களில் அமைத் திருப்பது, மக்களுக்கு நல்ல அறிவுரையாகும்.

பசுக்களைக் காத்து, அவைகளால் பெறும் பால் நெய் முதலியவற்றை விற்று, அவ் ஊதியத்தினால் வாழும் மக்கள், அக்காலத்தும் இருந்தனர். அவர் களது குடியின் செல்வ நிலையினைக் குறிப்பிடும் போது, இத்தனை பசுக்களை உடைய குடி எனக் குறிப்பிடப்பட்டது போலும்.[3] ஒருவனது குடும்ப

---

1. "உள்ளது சிதைப்போர் உளரெனப் படார்" குறுந் தொகை, செய்யுள், 283.
2. குறுந்தொகை, செய்யுள், 137.
3. பிற்காலத்தில், மாடு என்னும் சொல், பசுவினையும், செல்வத்தினையும் குறிப்பதாக நூல் வழக்கில் இருப் பது, இங்கு நினைக்கத் தக்கது.

வாழ்க்கை, "ஓர்ஆன் வல்சிச் சீர்இல் வாழ்க்கை"[1] என, இந் நூலில் கூறப்பட்டுள்ளது. ஒரு பசு வினல் வரும் ஊதியத்தினைக் கொண்டு உண்ணும் உணவை உடைய செல்வச் சிறப்பில்லாத இல்வாழ்க்கை என்பது, இதன் பொருளாகும். இவ்வாறே, நிலம் உடையவர்களை, இத்தனை ஏர் உடையார் என்று கூறும் வழக்கமும் அக்காலத்தில் இருந்தது போலும்.[2] "ஓர் ஏர் உழவன்"[3] என்னும் தொடர், இந் நூலில் உள்ளது. இத் தொடரினைத் தம் செய்யுளில் அமைத்தமையினல், இச் செய்யுளை இயற்றிய புலவர், ஓரேர் உழவனர் என்றே பெயர் வழங்கப் பெற்ருர். ஒற்றை ஏரை உடைய உழவன் என்பது, ஓர் ஏர் உழவன் என்பதன் பொருளாகும். ஓர் ஏரும், அதனல் உழப்படும் சிறுநிலமும் உடையவன் என்பது, இதன் கருத்தாம். அக்காலத்தில், வறியவர்களும் மிகவும் உழைத்து வாழ்வு நடத்தினர்கள் எனத் தமிழ் மக்களின் உயர்ந்த பண்பினை, இச் செய்திகளின் வாயிலாகப் புலவர்கள் புலப்படுத்தியிருப்பது அறிதற்குரியது.

## அன்பு வாழ்க்கை

இளமையில் விளையாடும்போது, தம் தாய்மார்கள் விலக்கவும் விலகாமல், ஒருவர் தலையை

---

1. குறுந்தொகை, செய்யுள், 295. "ஓர்ஆ யாத்த ஒருதூண் முன்றில்" என, அகநானூற்றில் (செய்யுள், 369.) வருவதும் காணலாம்.
2. இவ்வாறு கூறும் வழக்கம், திருநெல்வேலி மாவட்டம் முதலிய இடங்களில் இப்போதும் உள்ளது.
3. குறுந்தொகை, செய்யுள், 131.

ஒருவர் பற்றிச் சிறு சண்டை செய்யும் சிறுவன் ஒருவனும், சிறுமி ஒருத்தியும் பின்பு, அன்பு முதிர்ந்த கணவனும், மனைவியும் ஆயினர் என்னும் கருத்து, இந் நூலில் உள்ளது.[1] எனவே, எதிர் பாராத முறையில் தலைவனும், தலைவியும் எதிர்ப் பட்டுத் தம்முள் அன்பு கொண்டனர் எனச் சொல்லும் முறைக்கு வேறாகச் சிறுபருவம் முதல் விளையாடிப் பழகியவர்களே, பின்பு, மணம் புரிந்து கொண்டனர் என்னும் செய்தி அமைந்திருப்பது நினைத்தற்குரியது.

தலைமகள், தலைமகனுடன் தான் கொண்ட நட்பு, மிகச் சிறப்புடையது என்று தன் தோழியினிடம் கூறும்போது, அந் நட்பு, நிலத்தினைக் காட்டிலும் அகலம் உடையது; வானத்தினைக் காட்டிலும் உயர்ந் தது; கடலினைக் காட்டிலும் அளத்தற்கு அரிய ஆழம் உடையது; எனக் கூறியதாக அமைந்த செய்யுள் ஒன்று,[2] இந் நூலில் உள்ளது, இதிலிருந்து அக் காலத்துக் காதலர்களுடைய நட்பின் ஒப்பற்ற உயர் நிலை புலனாகும். நட்பின் பேரெல்லையை இதனினும் சிறப்பாகக் கூறுதல் இயலாது. தம்மிடத்து

---

1. குறுந்தொகை, செய்யுள், 229.
2. ''நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று
நீரினும் ஆரளவு இன்றே................ ...............
நாடனொடு நட்பே'' (குறுந்தொகை, செய்யுள், 3.)
''கடலினும் பெரிதுஎமக்கு அவருடை நட்பே''
எனத் தலைவி கூறுவதாக, ஐங்குறுநூற்றில் வரும் பகுதியும் இங்கே நினைத்தற்குரியது. (ஐங்குறுநூறு, செய்யுள், 184.)

உண்டாகிய நட்புப் பின்வரும் பிறப்பினும் தொடர்ந் திருத்தல் வேண்டும் எனத் தலைவி விரும்பினாள் என்னும் கருத்து, இந் நூலில் காணப்படுகின்றது.[1]

செல்வச் செழிப்புள்ள குடும்ப வாழ்க்கையில் ஈடுபட்ட தலைமகள் ஒருத்தி, தானே புளிக்குழம்பு ஆக்கி, அதனைத் தன் கணவன் உண்டு இன்புறுமாறு, அவனுக்குப் படைத்து மகிழ்ச்சி அடைந்த முறை, இந்நூற் செய்யுள் ஒன்றில்[2] சுவை பெறக் கூறப் பெற்றுள்ளது. தலைவி செல்வக் குடும்பத்தினளாயி னும் தானே உணவு ஆக்கித் தன் கணவனுக்குப் படைத்தாள்; தன் மனைவி ஆக்கிய உணவை உண்ப தில், கணவனின் மகிழ்ச்சி மிகுந்தது; அது கண்டு அவள் உளம் மகிழ்ந்தாள்; என்னும் செய்திகள், இச் செய்யுளில் அறியப்படுகின்றன.

தலைவனைப் பிரிந்து வருந்தும் தலைவி, அவனது தேர் வாராமல் இருப்பவும் அவள், அவனையே நினைத்துக் கொண்டிருப்பது காரணமாக, நடு இரவில், அவனது தேர் வருவது போன்ற ஓசை தனக்குக் கேட்பதாக நினைக்கிறாள்; இதனால், அவளு டைய கண்கள் உறங்கவில்லை; என்னும் கருத்து அமைந்த செய்யுள், இந் நூலில் உள்ளது.[3] இது, ஒன்றனையே இடைவிடாது நினைத்துக் கொண்டிருப் போர்க்கு இப்போதும் பழக்கத்தில் உள்ள செய்தி போல் தோன்றினும் தம் அன்பிற்கு உரியாரை

1. குறுந்தொகை, செய்யுள், 49.
2. குறுந்தொகை, செய்யுள், 167.
3. குறுந்தொகை, செய்யுள், 301.

ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் ஒருவரது மன நிலையை, இதனினும் அழகாகக் கூறுதல் அரிதாகும்.

தலைவனைப் பிரிந்து வருந்தும் தலைவி, தோழியை நோக்கி, "மாலைக் காலம் வந்தவுடன், தலைவனைப் பிரிந்த தனிமைத் துயரம் தாங்காமல் நான் துன்புறுகின்றேன். தலைவனும் என்னைப் பிரிந்ததனால் இவ்வாறு துன்புற்றால், உடனே புறப்பட்டு இங்கு வந்திருப்பான்; அவ்வாறு வாராமையினால், அவன் சென்ற நாட்டில், மாலைக் காலமும், தனிமைத் துயரமும் இல்லையோ?" என்று கூறினாள். இக் கருத்து அமைந்த செய்யுள், இந் நூலில் உள்ளது.[1] துயர் அடையும்போது, தாம் மட்டும் துயர் உறுவதாகவும், அதற்குக் காரணமான மற்றவர்களுக்குத் துன்பம் இல்லை எனவும் சிலர் நினைக்கின்ற உலகியல்பைத் தலைவனைப் பற்றிய தலைவியின் நினைவில், புலவர், இவ்வாறு, சுவைபட அமைத்துள்ளார்.

ஆண் குரங்கு இறந்துபட, அதனால் ஏற்பட்ட விதவைத் துன்பத்தினைத் தாங்க இயலாத பெண்

---

1. குறுந்தொகை, செய்யுள், 330. கழார்க்கீரன் எயிற்றியன் என்னும் புலவர் இயற்றிய இச் செய்யுளில், இக் கருத்தைப் புலப்படுத்துவனவாக உள்ள "புன்கண் மாலையும் புலம்பும், இன்றுகொல் தோழிஅவர் சென்ற நாட்டே" என்னும் அடிகள் இரண்டும் மாமலாடனார் இயற்றியதாக, இந் நூலில் காணப்படும் 46ஆம் செய்யுளில், இவ்வாறே உள்ளன. ஆயினும், கிளவிக் குறிப்பிற்கு ஏற்ப, அங்கே வேறு பொருள் கொள்வர்.

குரங்கு, தன் குட்டியைச் சுற்றத்தினிடம் ஒப்பித்து விட்டுத் தான் மலையின்மீதிருந்து கீழே பாய்ந்து உயிரை மாய்த்துக் கொள்ளும் என்ற குறிப்பு, இந் நூலில் காணப்படுகின்றது.[1] கணவன் இறந்துபட, விதவைத் துன்பத்தினைப் பொறுக்க இயலாமல், அவன் மனைவி, உடனே இறந்துபடுவதாக, மக்கள் வாழ்வில் நிகழக்கூடிய நிகழ்ச்சியை, இவ்வாறு, விலங்கின் வாழ்வில், புலவர் ஏற்றி உரைத்துள்ளார். இரவுப் பொழுதில் தலைவியை நாடி வரும் தலைவனுக்குத் துன்பம் நேர்ந்தால், தலைவி இறந்துபடுவாள் என்னும் கருத்தினை வற்புறுத்தி உணர்த்த, இவ்வாறு புலவர், கற்பனை செய்துள்ளார். மக்கள் வாழ்க்கைக்கும், விலங்கு முதலியவற்றின் வாழ்க்கைக்கும் வேறுபாடுகள் உண்டு; ஆயினும், மக்கள் வாழ்க்கையில் நடக்கும் நிகழ்ச்சிகளை, விலங்குகள் முதலியவற்றின் வாழ்வில் வைத்துப் புலவர்கள், தாம் கூற எடுத்துக்கொண்ட செய்தியை வெளிப் படையாகக் கூறாமல், இவ்வாறு குறிப்பாகப் புலப் படுத்தும் முறை, போற்றுதற்குரியது.

**பழமொழிகள்**

பலமுறை உண்டவர் வாய்க்குத் தேனும் புளிப்புச் சுவை உடையதாகும் என்னும் பொருளில், "ஆர்ந்தோர் வாயில் தேனும் புளிக்கும்"[2] என, இந் நூலில் வரும் பகுதி, 'பழகப் பழகப் பாலும புளிக்கும்' என்னும் பழமொழியினை நினைவூட்டுகின்றது.

1. குறுந்தொகை, செய்யுள், 69.
2. குறுந்தொகை, செய்யுள், 354.

இவ்வாறு, பழமொழிக் கருத்து அமைந்த பகுதிகளை, இந் நூலில், மேலும் சில இடங்களில் காணலாம்.[1]

**உவமைகள்**

இந் நூலில் உள்ள உவமைகள், மிக்க சுவை உடையன. எடுத்துக்காட்டுக்களாகச் சிலவற்றைக் காண்போம். தலைவி விரும்பிய தொழிலைத் தலைவன் செய்கின்றான் என்பதற்குக் கண்ணாடியில் தோன்றும் பாவை, உவமையாகக் கூறப்பட்டிருக்கும் முறை, நகைச் சுவை தருவதாகும். கண்ணாடியின் முன் நின்றார், தம் கையையும் காலையும், தூக்கும் போது, அவ்வாறே, அக் கண்ணாடியில் தோன்றுகின்ற எதிர் உருவமாகிய பாவையும் தன் கையையும், காலையும் தூக்குவது போலத் தலைவி விரும்பிய தொழிலைத் தலைவன் செய்கின்றான் என்பது, இதன் கருத்தாம்.[2] இது, தன் மனைவிக்கு அஞ்சி நடக்கும் ஓர் ஆண்மகனின் இயல்பாக, அவர்களிடத்து மனம் வேறுபட்ட பரத்தை ஒருத்தியினால்

---

1. சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினர், 1940ல் வெளியிட்டுள்ள, குறுந்தொகைச் சொற்பொழிவுகள் என்னும் நூலில், இந் நூலாசிரியரின் மருதத்தினை பற்றிய சொற்பொழிவு வெளிவந்துள்ளது. அதன்கண், சில பழமொழிகள், விளக்கப் பெற்றுள்ளன. (பக்கம், 135—137.)

2. ''கையும் காலும் தூக்கத் தூக்கும்
ஆடிப் பாவை போல
மேவன செய்யுந்தன் புதல்வன் தாய்க்கே''
(குறுந்தொகை, செய்யுள், 8.)

கூறப்பட்டது ஆதலால், அக்காலத்துத் தலைவன் தலைவியரின் பொது இயல்பு ஒன்றனை, இச் செய்யுளில், புலவர் கூறியிருப்பதாகக் கொள்ளுதல் ஆகாது.

தலைவன் கருத்தின்படியே யான் நடப்பேன் எனத் தலைவி கூறுவதாக, இந் நூலில் உள்ள செய்யுள் ஒன்றில், அத் தலைவியின் செயலுக்கு நெருஞ்சிப் பூ உவமையாகக் கூறப்பட்டுள்ளது.[1] நெருஞ்சிப் பூ, சூரியன் கிழக்குத் திசையில் இருந்தால், கிழக்கு நோக்கியும், மேற்குத் திசையில் இருந்தால், மேற்கு நோக்கியும் வானத்து உச்சியில் இருந்தால், அவ் உச்சியை நோக்கியும் நிற்பது போலத் தலைவியும் தலைவன் கருத்தின்படி நிற்பாள் என்பது, இவ் உவமைக்கு விளக்கமாகும். இது, கற்பின் திண்மையைப் புலப்படுத்தும். நெருஞ்சிச் செடியில், முதலில், மலர் தோன்றிப் பின், அது வாடியவுடன், அதன் இடத்தில் முள் தோன்றும். இது, இயல்பே ஆயினும் பலருக்குத் தெரியாது. பரத்தையை விட்டுப் பிரிந்து வந்த தலைவனுக்குத் தூதாக வந்த தோழி, ஊடல் நீங்கித் தலைவனை ஏற்றுக் கொள்ளுதல் வேண்டும் எனத் தலைவியினிடம் கூறினள். அப்போது தலைவி, முன்பு, இனியனாய் இருந்த தலைவன், இப்போது, பரத்தையர் மாட்டு அன்பு உடையவனாய் ஒழுகித் துன்பம் தருவனவற்றைச் செய்கின்றான் என்று கூறியதற்கு உவமையாக, இச் செய்தி, இந் நூலில், மற்றோரிடத்

---

1. குறுந்தொகை, செய்யுள், 315.

தில் கூறப்பட்டிருப்பதும் நினைக்கத் தக்கது.[1] இவ்வாறு, இயற்கைப் பொருள்களின் இயல்புகளை நன்கு அறிந்து, அவற்றை, மக்களின் வாழ்க்கையுடன் இணைத்து நோக்கும் புலவர்களின் அறிவாற்றலைச் சங்க இலக்கியங்களில் மிகுதியாகக் காணலாம்.

பிரிந்து செல்லும் தலைவனிடம், விரைவில் வருதல் வேண்டும் எனத் தோழி கூறுவதாக, இந்நூலில் ஒரு செய்யுள்[2] உள்ளது. அச் செய்யுளில், தலைவன் தலைவியைப் பிரிந்து, அதனால் அவளுக்குத் துன்பம் செய்தாலும் அவள், அவன் பொறுப்பில் உள்ளவள் எனத் தோழி சொல்லும்போது, அச் செய்திக்கு உவமையாகத் தாய் சினங் கொண்டு வருத்தும்போதும் வாய் திறந்து அம்மா என்று அழும் குழந்தையின் இயல்பு கூறப்பட்டுள்ளது. அன்னை அடித்தாலும் குழந்தை அம்மா என்று கூறி அழுதல், எல்லோர்க்கும் தெரிந்ததும், என்றும் நிகழ்வதும் ஆகிய செய்தியாகும். ஆயினும், இயல்பாக அமைந்த இந்த அருமையை ஒருவரும் நினைத்துப் பார்ப்பதில்லை. இதனை நினைத்துக் குழந்தை உள்ளத்தினை உணர்ந்து, இதற்கு இலக்கிய வடிவு கொடுத்த புலவரின் திறம், அறிந்து இன்புறுதற்கு உரியது.

மேலும், முள்ளிச் செடியின் முள்ளிற்கு அணிலின் பல்லும்[3] திரண்ட கரும்பினது குவிந்த அரும்பிற்குப்

---

1. குறுந்தொகை, செய்யுள், 202.
2. குறுந்தொகை, செய்யுள், 397.
3. குறுந்தொகை, செய்யுள், 49.

பச்சைப் பாம்பின் சூல் முதிர்ந்த தோற்றமும்,[1] ஓந்தி யின் முதுகிற்குக் கருக்கரிவாளும்[2] ஞாழல் மரத்தின் பூவிற்கு வெண்சிறுகடுகும்[3] உவமைகளாக, இந் நூலில் கூறப்பட்டுள்ளன. இத்தகைய உவமைகள், புலவர்களின் உற்று நோக்கும் ஆற்றலுக்குச் சான்று களாகும்.

---

1. குறுந்தொகை, செய்யுள், 35.
2. குறுந்தொகை, செய்யுள், 140.
3. குறுந்தொகை, செய்யுள், 50.

# 5. ஐங்குறுநூறு

இந்நூல், கடவுள் வாழ்த்துச் செய்யுள் உட்பட, ஐந்நூற்றொரு ஆசிரியப் பாக்களை உடையது.[1] எட்டுத்தொகை நூல்களுள், மிகுதியான செய்யுட்களைக் கொண்ட நூல் இதுவாகும். இந்நூற் செய்யுட்கள், ஆசிரியப்பாவின் சிற்றெல்லையாகிய மூன்று அடி முதல் ஆறு அடிக்கு மேற்படாதனவாக இருத்தலால், இந்நூற் பெயரில், குறு (குறுமை) என்னும் அடைமொழி சேர்க்கப் பட்டுள்ளது, எனவே, இந்நூல், எட்டுத்தொகைச் செய்யுட்களுள், அடி எண் அளவினால் குறைந்த சிறிய செய்யுட்களை உடையது என்பது உணரப்படும். இந்நூற் செய்யுட்கள், குறைந்த எண் அளவு அடிகளை உடையனவாயினும் அகப்பொருட் சுவையில், ஏனைய தொகை நூற் செய்யுட்களுக்குக் குறையாமல் உள்ளன.

---

1. இந் நூலின் 129, 130 ஆம் செய்யுட்கள் கிடைக்கவில்லை. ஐந்நூற்றொரு செய்யுட்களுக்கு மேலும் ஆறு செய்யுட்கள், கையெழுத்துப் படி ஒன்றில் மட்டும் உள்ளன என்று, டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்கள் குறிப்பிட்டு, அச் செய்யுட்களையும் வெளியிட்டுள்ளார்கள்.

இந்நூல், மருதம் முதலிய திணைகள் ஐந்தினையும் பற்றித் திணை ஒன்றிற்கு நூறு செய்யுட்களாகப் புலவர் ஐவரால் இயற்றப்பட்ட ஐந்நூறு செய்யுட்களின் தொகுப்பாகும். இந் நூலின் மருதத் திணையை ஓரம்போகியாரும், நெய்தல் திணையை அம்மூவனாரும்,[1] குறிஞ்சித் திணையைக் கபிலரும், பாலைத் திணையை ஓதலாந்தையாரும், முல்லைத் திணையைப் பேயனாரும் பாடியுள்ளனர். இவ்வாறு, ஒரு திணைக்கு உரிய பாக்கள் ஒருங்கு காணப்படும் நூல்கள், எட்டுத்தொகையுள், இவ் ஐங்குறுநூறும், கலித்தொகையுமே ஆகும். பதினெண் கீழ்க்கணக்கில் அடங்கிய ஐந்திணை ஐம்பது, திணைமாலை நூற்றைம்பது, திணைமொழி ஐம்பது, ஐந்திணை எழுபது ஆகிய நூல்களும் இவ்வாறு அமைந்தனவே.

## பத்துக்களின் அமைப்பும், பெயரும்

ஐங்குறுநூற்றில், ஒவ்வொரு திணையிலும் பத்து உட்பிரிவுகள் உள்ளன. இவ் உட்பிரிவுகள் ஒவ்வொன்றிலும் பத்துச் செய்யுட்கள் இருத்தலால், இவ் உட்பிரிவுகள் ஒவ்வொன்றும் பத்து எனப் பெயர் பெற்றுள்ளன. ஒவ்வொரு பத்தும் ஒவ்வொரு பொருள் பற்றி அமைந்துள்ளது. பத்துக்களில் வருகின்ற செய்யுட்களில் உள்ள கருத்தை

---

1. மேலைக் கடற்கரையைச் சார்ந்த சேர நாட்டில், இப்போதும் அம்மு என்னும் பெயர் வழங்கி வருதலால் இவர், அந்நாட்டில் வாழ்ந்தவரெனக் கருதலாம் என்பர்.

யேனும், சொல்லேயேனும், சொற்ருெடரையேனும் கொண்டு, வேட்கைப் பத்து, வேழப் பத்து, வெள்ளாங்குருகுப் பத்து முதலிய பெயர்கள், இப் பத்துக்களுக்கு இடப்பட்டுள்ளன.[1] பெயராக அமைந்த சொல், செய்யுட்களில், இன்ன இடத்தில் இருத்தல் வேண்டும் என்னும் வரையறையின்றிச் செய்யுட்களில், முதலிலேனும், இடையிலேனும், இறுதியிலேனும் இருத்தலேயும், பெயராக அமைந்த சொற்ருெடர், செய்யுட்களில், முதலிலேயே இருத்தலேயும் காணலாம். இத்தகைய சொற்களும், சொற்ருெடர்களும், பெயராக அமைந்த கருத்துக்களும் அவ்வப் பத்திற்குச் சிறப்பும், பொருத்தமும் உடையன என்று கருதலாம்.

வேழப் பதது கள்வன் பத்து முதலிய பத்துக்களில், அவற்றின் பெயராக அமைந்த வேழம், கள்வன் என்னும் சொல்லே, அவ்வப் பத்துக்களில் உள்ள செய்யுட்கள் பத்திலும் அமைந்திருத்தல் போல் அன்றி, வேறு பத்துக்கள் சிலவற்றில், அவற்றின் பெயராக அமைந்த சொற்களும், அச் சொற்களால் உணர்த்தப் பெறும் பொருளேத் தரும் பிற சொற்களும் செய்யுட்களில் காணப்படுகின்றன. சான்ருக—மஞ்ஞைப் பத்தில், மஞ்ஞை என்னும் சொல்லே அன்றி, அப் பொருளேத் தரும் மயில், தோகை என்னும் சொற்களும், குரக்குப் பத்தில்,

1. இம் முறையினைப் பின்பற்றிப் பிற்கால நூலாகிய திருவாசகத்தில், உயிருண்ணிப் பத்து, குயில் பத்து முதலிய பெயர்கள் இடப்பட்டிருத்தலேக் காணலாம்.

குரங்கு என்னும் சொல்லே அன்றி, அப் பொருளைத் தரும் மந்தி, கடுவன் என்னும் சொற்களும் அமைந்திருத்தலைக் காணலாம். அன்னாய்ப் பத்து, தெய்யோப் பத்து என்னும் பத்துக்களில், அன்னாய், தெய்யோ என்னும் சொற்கள், அவ்வப் பத்துக்களில் உள்ள செய்யுட்கள் பத்திலும் இறுதிச் சொல்லாக அமைந்துள்ளன.

அம்மவாழிப் பத்தில் உள்ள செய்யுட்கள் பத்திலும் 'அம்மவாழி தோழி' என்னும் சொற்றொடர், முதலில் அமைந்திருப்பது போலத் தலைவியிரங்கு பத்திலும் அப் பத்தில் உள்ள செய்யுட்கள் பத்திலும் 'அம்மவாழி தோழி' என்னும் சொற்றொடர், முதலில் உள்ளது.

வெள்ளாங்குருகுப் பத்தில் உள்ள செய்யுட்கள் பத்திலும் முதல் இரண்டு அடிகளும் ஒரே அமைப்பில் உள்ளன. அவ் அடிகள்,

"வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்
காணிய சென்ற மடநடை நாரை"

என்பன ஆகும். இவ்வாறே, சிறுவெண்காக்கைப் பத்தில் உள்ள செய்யுட்கள் பத்திலும் முதல் அடி, ஒரே அமைப்பில்,

"பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை" எனவும், இளவேனிற் பத்தில் உள்ள செய்யுட்கள் பத்திலும் முதல் அடி, ஒரே அமைப்பில்,

"அவரோ வாரார் தான்வந் தன்றே" எனவும், புறவணிப் பத்தில் உள்ள செய்யுட்கள் பத்திலும் முதல் அடி, ஒரே அமைப்பில்,

"நன்றே காதலர் சென்ற வாறே" எனவும், கிழவற்குரைத்த பத்தில் கிடைத்துள்ள செய்யுட்கள் எட்டிலும் முதல் அடி, ஒரே அமைப்பில்,

"கண்டிகு மல்லமோ கொண்கநின் கேளே"

எனவும் உள்ளன, இவ் அமைப்புக்களை எண்ணும் போது, உடல் போன்ற சொல் அமைப்பினும் உயிர் போன்ற பொருள் அமைப்பிற்கு அக்காலப் புலவர்கள் முதன்மை கொடுத்துள்ள உயர் குறிக்கோள் தெரிகின்றது. இவற்றுள், இளவேனிற் பத்து, புறவணிப் பத்து, கிழவற்குரைத்த பத்து ஆகிய பத்துக்கள் மூன்றிலும் உள்ள எல்லாச் செய்யுட்களும் ஐங்குறுநூற்றுச் செய்யுட்களின் சிற்றெல்லையாகிய மூன்றடி உடைய செய்யுட்களாக இருத்தலும் அறிதற்குரியது. இம் மூன்றடிகளுள்ளும் முதல் ஓர் அடி, ஒரே அமைப்பில் இருத்தலால், ஏனைய இரண்டு அடிகளிலேயே, குறட்பாக்களில் கூறுவது போலப் புலவர்கள், தாம் சொல்ல எண்ணிய கருத்துக்களைப் பல்வேறு வகைகளில், அழகுறக் கூறியுள்ளனர்.

இந் நூலில், ஒவ்வொரு பத்திலும் உள்ள செய்யுட்கள் பத்தும் அவ்வப் பத்திற்கு ஏற்ற பல்வேறு அகப்பொருள் கிளவிகளில் அமைந்துள்ளன. ஆயினும், இளவேனிற் பத்து, புறவணிப் பத்து, தேர் வியங்கொண்ட பத்து, கிழவற்குரைத்த பத்து என்னும் பத்துக்கள் நான்கும் அவ்வாறின்றி, ஒவ்வொரு பத்திலும் உள்ள எல்லாச் செய்யுட்களும் ஒவ்வொரு கிளவியிலேயே அமைந்திருப்பது, நினைத்தற்குரியது.

## தொகுப்பித்தவரும், தொகுத்தவரும்

இந் நூலினைத் தொகுப்பித்தவர், யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை என்பதும், தொகுத்தவர், புலத்துறை முற்றிய கூடலூர் கிழார் என்பதும் முன்பு[1] கூறப்பட்டன. யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை, சங்க காலத்துச் சேர வேந்தர் ஆவர். இவரைப் பற்றிப் பாடப் பெற்ற சில செய்யுட்கள், புறநானூற்றில் காணப்படுகின்றன. அவற்றுள், ஒரு செய்யுள், இந் நூலினைத் தொகுத்த புலத்துறை முற்றிய கூடலூர் கிழாரால், யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை இறந்தபோது பாடப்பட்டது.[2] இக் கூடலூர் கிழாரும், சேர நாட்டினைச் சேர்ந்தவர். எனவே, இந் நூலினைத் தொகுப்பித்தவரும், தொகுத்தவரும் சேர நாட்டினர் ஆவர். ஆதலின், சேர வேந்தனாகிய ஆதன் அவினியை வாழ்த்தும் வேட்கைப் பத்து, இந் நூலின் முதலில் வைக்கப் பெற்றிருப்பதும், இப் பத்தினைக் கொண்ட மருதத் திணை, இந் நூலின் முதலில் தொகுக்கப் பெற்றிருப்பதும் பொருத்தமேயாகும். அடுத்துச் சேர நாட்டுக் கடற்கரைப் பட்டினமாகிய தொண்டியைப் பற்றிய தொண்டிப் பத்தினை உடைய நெய்தல் திணை, அமைக்கப்பட்டுள்ளது. பின்பு, மலைநாட்டு அரசர்களைப் பாடி, மலைநாட்டில் பெரும்பாலும் வாழ்ந்து, மலை வளம் பாடுதலில் புகழ் பெற்ற கபிலர் பாடிய குறிஞ்சித்

---

1. எட்டுத்தொகைச் செல்வம், பக்கம், 18.
2. புறநானூறு, செய்யுள், 229.

திணை, வைக்கப்பட்டுள்ளது. இவ்வாறு, இத் திணைகளின் முறை வைப்பிற்கு ஒருவாறு காரணம் கூறலாம். ஆயினும், இவற்றின் பின், பாலைத் திணையும், முல்லைத் திணையும் வைக்கப் பெற்றதற்கு உரிய காரணம், ஆராய்தற்கு உரியதாக உள்ளது.

**கருத்து**

இந் நூலில் உள்ள செய்யுட்கள் ஒவ்வொன்றன் பின்னும் அதன் கருத்து (கிளவி), எழுதப்பட்டுள்ளது. சில செய்யுட்களுக்கு இரண்டு கருத்துக்களும் காணப்படுகின்றன. இக் கருத்துக்களை எழுதியவர் இன்னார் என்பது புலப்படவில்லை. தொல்காப்பியப் பொருளதிகார உரையில், நச்சினார்க்கினியர், தாம் மேற்கோளாகக் காட்டிய, இந்நூற் செய்யுட்கள் சிலவற்றிற்கு இக் கருத்துக்களைத் தழுவாமல் வேறு கருத்துக்கள் எழுதி, அவற்றிற்கு ஏற்ப விளக்கமும் கூறியுள்ளார்.

**உரைகள்**

இந் நூலிற்குப் பழைய உரை ஒன்று உள்ளது. இது, இந் நூலின் முதல் நானூற்று அறுபத்தொன்பது செய்யுட்களுக்குக் கிடைத்துள்ளது. இவற்றுள், இடையிடையே சில செய்யுட்களுக்கு இவ் உரை இல்லை. இவ் உரை, உள்ளுறை உவமம், இறைச்சிப் பொருள் முதலியவற்றை விளக்கிச் செல்வதுடன், இடையிடையே அருஞ்சொற் பொருளும், இலக்கணக் குறிப்பும் அமைந்ததாக உள்ளது. இவ் உரையினை எழுதியவர் இன்னார் என்பது தெரியவில்லை. ஆயினும், உரையின் இயல்பினை

நோக்கும்போது, இவ் உரையாசிரியர்-பேராசிரியர், பரிமேலழகர் முதலானவர்களுள் ஒருவரோ? அவர்களைப் போன்ற வேறு ஒருவரோ? என்னும் ஐயம் ஏற்படுகின்றது. இப் பழைய உரையுடன், டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்கள், 1903 ஆம் ஆண்டில், இந் நூலினைப் பதிப்பித்துள்ளார்கள்.

பின்னர், இந் நூலிற்கு ஔவை சு. துரைசாமிப் பிள்ளை அவர்கள் எழுதிய விளக்கவுரை, அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தினால், 1957, 1958 ஆம் ஆண்டுகளில், மூன்று பகுதிகளாக வெளியிடப் பெற்றுள்ளது.

## வரலாற்றுக் குறிப்புக்கள்

ஆதன் அவினி[1] கடுமான் கிள்ளி,[2] முதலிய மன்னர்களைப் பற்றியும், விராஅன்[3] மத்தி[4] ஆகிய வள்ளல்களைப் பற்றியும் இந் நூலில், குறிப்புக்கள் உள்ளன. தொண்டி,[5] கொற்கை,[6] தேனூர்,[7] ஆமூர்,[8] இருப்பை,[9] கழாஅர்[10] ஆகிய ஊர்களைப் பற்றிய

1. ஐங்குறுநூறு, மருதம், வேட்கைப் பத்து.
2. ஐங்குறுநூறு, செய்யுள், 78.
3. ஐங்குறுநூறு, செய்யுள், 58.
4. ஐங்குறுநூறு, செய்யுள், 61.
5. ஐங்குறுநூறு, நெய்தல், தொண்டிப் பத்து.
6. ஐங்குறுநூறு, செய்யுள், 188.
7. ஐங்குறுநூறு, செய்யுள், 54. 55, 57.
8. ஐங்குறுநூறு, செய்யுள், 56.
9. ஐங்குறுநூறு, செய்யுள், 58.
10. ஐங்குறுநூறு, செய்யுள், 61.

குறிப்புக்களும் இந் நூலில் காணப்படுகின்றன. இவ் ஊர்களுள், தேனூரைப் பற்றி ஓரம்போகியார், சிறப்பாகப் பாராட்டிப் பாடியிருத்தலால், இவர், இவ் ஊருடன் நெருங்கிய தொடர்பு உடையவராக இருத்தல் கூடும் என்று நினைக்கலாம்.

## பழக்க வழக்கங்கள்

தமிழ் மக்களின் பழக்க வழக்கங்கள் சில வற்றை இந் நூலில் அறியலாம். மலைவாணன் மகள் ஒருத்தி, தான் விரும்பிய தலைவனுக்கும், தனக்கும் விரைவில் மணம் நிகழ்தல் வேண்டும் என்று வேண்டித் தன் குலமுதல் கடவுளை வழிபட்டனள் என்பது, இந் நூலில் உள்ளது.[1] ஒருவன், தன் தந்தையின் பெயரைத் தன் மகனுக்கு இடும் வழக்கம் உண்டு என்பதும் இந் நூலில் தெரிகின்றது.[2] சிறு மியருடைய அறியாமையைப் புலப்படுத்தும் விளை யாட்டு நிகழ்ச்சிகள் பல, இந் நூலில், கிழவற்கு உரைத்த பத்தில் கூறப் பெற்றுள்ளன.

---

1. ஐங்குறுநூறு, செய்யுள், 259.
2. "அகன்பெரும் சிறப்பின் தந்தை பெயரன்" (ஐங்குறுநூறு, செய்யுள், 403.) சுந்தரமூர்த்தி நாயனாரின் முதற்பெயர், ஆரூரர் என்பதாகும். இப் பெயர், அவர் தந்தையின் தந்தை பெயர் என்பது, இங்கு நினைக்கத் தக்கது. இக்காலத்தும் இவ்வாறு பெயரிடும் வழக்கம் உண்டு.

### சில செய்திகள்

சிலப்பதிகாரத்திலும், மணிமேகலையிலும் விரிவாகக் காணப்பெறும் இந்திர விழாவினைப் பற்றிய குறிப்பு, இந் நூலில் உள்ளது.[1]

தாய், தன் பிள்ளையினிடத்துத் தனிப் பேரன்பு செலுத்துதல், எல்லா உயிர்களிடத்திலும் காணப்படும் பொது இயல்பாகும். இதற்கு மாருக, முதலை, தான் பெற்ற பிள்ளையைத் தின்னும் இயல்புடையது என்னும் அரிய செய்தியினை, ஓரம்போகியார் என்னும் புலவர் அறிந்து, இந் நூலில் கூறியுள்ளார்.[2] மேலும், இப் புலவர், நண்டு, தன் தாய் சாவப் பிறக்கும் என்னும் செய்தியினையும்,[3] ஆமை, தன் தாய் முகத்தைப் பார்த்து வளரும் இயல்புடையது என்னும் செய்தியினையும்[4] கூறியிருத்தலும் குறிப்பிடத் தக்கதாகும்.

### உயர்ந்த குறிக்கோள்

இந் நூலில், முதலாவதாக உள்ள வேட்கைப் பத்தின் கருத்து, உயர்ந்த குறிக்கோள் உடையது. தலைவியை நெடுநாள், புறத்தொழுக்கத்தில் பிரிந்த

---

1. ஐங்குறுநூறு, செய்யுள், 62.
2. ''பிள்ளை தின்னும் முதலைத்து அவன்ஊர்'' (ஐங்குறுநூறு, செய்யுள், 24.)
''தன்பார்ப்புத் தின்னும் அன்பில் முதலை'' (ஐங்குறுநூறு, செய்யுள், 41.)
3. ஐங்குறுநூறு, செய்யுள், 24.
4. ஐங்குறுநூறு, செய்யுள், 44.

தலைவன் பின்பு கூடியும், களவு ஒழுக்கத்தில் பிரிந்த தலைவன், பின்பு மணம் செய்துகொண்டும் ஒழுகும் காலத்தில், தலைவியின் தோழியை நோக்கி, "நான் பிரிந்திருந்தபோது, நீவீர் என்ன நினைத்தீர்கள்?" என்று கேட்டபோது, தோழி கூறும் மறுமொழிகளாக, இப் பத்து, அமைந்துள்ளது. இதன் கருத்தாவது—"அரசன் வாழ்க; நாட்டில் பருவ மழை, தவறாமல் பெய்க; நெல் பல பொலிக; பொன், மிக உண்டாகுக; இரவலர் வருக; அறம் பல சிறக்க; பாவம் கெடுக; பசி இல்லையாகுக; நோய் ஒழிக; அரசன் முறை செய்க; என்று, எங்கள் தலைவி, வேண்டிக் கொண்டிருந்தாள். யானும், என் தோழியரும் இத்தகைய நல்லாளிடத்து நின் அன்பு பெருகுவதாகுக என்று வேண்டினோம்." என்பதாம். இப் பத்திற்கு உரை எழுதிய பழைய உரையாசிரியர், காவற் பொருட்டு அரசன் வாழ்க; விருந்தாற்றுதற் பொருட்டு நெற்பல பொலிக; இரவலர்க்கு ஈதற் பொருட்டுப் பொன் மிக உண்டாகுக; என, முதற் செய்யுளின் உரையில் எழுதியுள்ளார். இதிலிருந்து பண்டைக்காலத் தமிழ் அரசர்கள், தம் நலத்திற்காக வாழாது, பிறர் நலமே குறிக்கோளாகக் கொண்டு வாழ்ந்தனர் என்பதும், பண்டைத் தமிழ் மகளிர், தம்முடைய நெல்லும், பொன்னும் தமக்குப் பயன்படுதலினும் பிறர்க்குப் பயன்படுதல் வேண்டும் என்னும் உயர்ந்த நோக்கம் உடையவராக இருந்தனர் என்பதும் புலப்படுகின்றன.

## உள்ளுறை உவமம்

இந்நூற் செய்யுட்கள், அடி எண் அளவில் குறைந்தனவாக இருத்தலால், கருத்துக்களை விளக்குதற்குப் புலவர்கள், உள்ளுறை உவமத் தினைப் பல செய்யுட்களில் எடுத்தாண்டுள்ளனர். உள்ளுறை உவமம், தெய்வம் ஒழிந்த கருப்பொருள் களை இடமாகக் கொண்டு தோன்றும்; அக் கருப் பொருள்கள், நேரில் காணப்படுவன போல, இந் நூலில், எடுத்துரைக்கப் பெற்றுள்ளன. அவற்றுள் ளும் விலங்கு, பறவை முதலிய கருப்பொருள்களைப் பற்றிய குறிப்புக்கள், இந் நூலில், மிகுதியாக உள்ளன. அவ் விலங்குகள், பறவைகள் முதலி யவை, கருப்பொருளாக அமைய, அவற்றின் வாழ்க் கையில் புலவர்கள் கண்ட காட்சிகள், அகப்பொருட் கருத்துக்களை விளக்குதற்குப் பின்னணியாக எடுத் துரைக்கப் பட்டுள்ளன. எருமை, கேழல் (பன்றி), குரங்கு என்னும் விலங்குகளின் பெயரிலும், சிறு வெண் காக்கை, கிள்ளை (கிளி), மஞ்ஞை (மயில்) என்னும் பறவைகளின் பெயரிலும், கள்வன் (நண்டு) பெயரிலும் அமைந்த பத்துக்களில், அகப்பொருட் கருத்துக்களுடன். அவ்வவ் விலங்குகள், அவ்வப் பறவைகள், நண்டு ஆகியவற்றின் வாழ்வியல்களும் அழகுற உணர்த்தப்பட்டுள்ளன.

## நகைச் சுவை

இந் நூலில், மதத்தால் மயங்கிய ஓர் ஆண் யானை, திரண்டு நிற்கும் கரிய மலைப் பாறையைப் பெண் யானை எனக் கருதித் தழுவும் என்று கூறப்

பட்டிருத்தலும்[1] அவரைக் காய்களை நிறையத் தின்று குரங்கிற்குப் பண்டம் விற்போரது பை, உவமையாகக் கூறப்பட்டிருத்தலும்[2] நகைச் சுவை தருவனவாகும்.

## அந்தாதி

இந் நூலில் தொண்டிப் பத்தில் உள்ள செய்யுட்கள் பத்தும் அந்தாதி[3] முறையில் உள்ளன. எட்டுத்தொகையுள் மற்றொரு நூலாகிய பதிற்றுப் பத்திலும் நான்காம் பத்தில் உள்ள செய்யுட்கள் பத்தும் அந்தாதியாகக் காணப்படுகின்றன. பிற்காலத்தில் தோன்றிய அந்தாதி நூல்கள், இவற்றைப் பின்பற்றியன என்று கருதலாம்.

## கோவை

மேலும், தொண்டிப் பத்தில் உள்ள செய்யுட்கள் பத்தின் கருத்துக்களும் அகப்பொருள் கிளவி முறையில் தொடர்ச்சியாக இருத்தலும் குறிப்பிடத் தக்கது. முதல் முறை தலைவியைக் கூடி நீங்கும் தலைவன், தன்னைப் பிரிந்து தோழியரோடு

---

1. ஐங்குறுநூறு, செய்யுள், 239.
2. ஐங்குறுநூறு, செய்யுள், 271.
3. அந்தாதி என்பது, 96 வகைச் சின்னூல்களுள் ஒன்று. இது, ஒவ்வொரு செய்யுளிலும் இறுதியில் உள்ள எழுத்து, அசை, சொல், சீர், அடி இவற்றுள் ஒன்று, அதற்கு அடுத்த செய்யுளின் முதலாக வரும்படி அமைத்துப் பாடப்படுவது.

செல்லும் தலைமகளைப் பார்த்துச் சொல்லுதல், மீண்டும், பாங்கனின் உதவியினாலும், தோழியின் உதவியினாலும் அவன், தலைமகளைக் கூடுதல், பின்பு, தோழி, விரைவில் வரைந்து கொள்ளுமாறு அவனிடம் சொல்லுதல் ஆகிய செய்திகள் பற்றிய கிளவிகள், இச் செய்யுட்கள் பத்திலும் தொடர்ச்சி யாக உள்ளன. அகப்பொருள் கிளவிகள் பலவற்றை ஒரு கதையாக முறைப்படுத்திப் பிற்காலத்தினர், கோவை நூல்கள் அமைத்ததற்கு இம் முறை, உதவியது என்று கருதலாம்.

மேற் கூறிய செய்திகளை எண்ணும்போது, இத் தொண்டிப் பத்தில் உள்ள செய்யுட்கள் பத்தும் அந்தாதியாக அமைந்தும், அகப்பொருள் கிளவிகள் தொடர்ச்சியாக அமைந்தும் சொல்லினாலும், பொருளினாலும் ஒரு செய்யுளுடன் மற்றொரு செய்யுள் தொடர்பு கொண்டு, தனிச் சிறப்புடன் விளங்குதல், அறிந்து இன்புறுதற்கு உரியது.

# 6. கலித்தொகை

இந்நூல், கலிப்பாக்களினுல் தொகுக்கப் பெற்றமையினுல், கலித்தொகை எனப் பெயர் பெற்றது. இந் நூலினைக் "கற்றறிந்தார் ஏத்தும் கலி" எனவும், "கல்விவலார் கண்ட கலி" எனவும் அறிஞர்கள், பாராட்டிக் கூறியுள்ளனர். இந் நூலில், கடவுள் வாழ்த்துச் செய்யுள் ஒன்றும், பாலைத் திணைச் செய்யுட்கள் 35ம், குறிஞ்சித் திணைச் செய்யுட்கள் 29ம், மருதத் திணைச் செய்யுட்கள் 35ம், முல்லைத் திணைச் செய்யுட்கள் 17ம், நெய்தல் திணைச் செய்யுட்கள் 33ம் ஆக, 150 கலிப்பாக்கள் உள்ளன. இவற்றுள், பாலைத் திணைச் செய்யுட்கள், பாலை பாடிய பெருங்கடுங்கோவினுலும், குறிஞ்சித் திணைச் செய்யுட்கள், கபிலராலும், மருதத் திணைச் செய்யுட்கள், மருதனிளநாகனுராலும், முல்லைத் திணைச் செய்யுட்கள், சோழன் நல்லுருத்திரனுலும், நெய்தல் திணைச் செய்யுட்கள், நல்லந்துவனுராலும் பாடப் பெற்றன. இந் நல்லந்துவனுரே, இந் நூலின் கடவுள் வாழ்த்துச் செய்யுளினை இயற்றியவர் என்பர். இந் நூலில் உள்ள செய்யுட்கள் நூற்றைம்பது என்பது, இறையனுர் களவியல் உரையிலும், தொல்காப்பிய உரை

களிலும், இந் நூலின் உரையிலும் குறிப்பிடப் பெற்றுள்ளது.

இந் நூலில், ஒவ்வொரு திணைக்கும் உரிய செய்யுட்கள், ஒருங்கு சேர்ந்து அமைந்துள்ளன. இச் செய்யுட்களைக் கொண்ட திணைகள் ஒவ்வொன்றும் நூற் பெயருடன் சேர்ந்து, பாலைக்கலி, குறிஞ்சிக்கலி, மருதக்கலி, முல்லைக்கலி, நெய்தற்கலி எனத் தனித் தனியாகவும் பெயர் வழங்கப் பெறும். இத்தகைய பெயர் ஆட்சியினை, இறையனார் களவியல் உரை, தொல்காப்பிய உரை முதலியவற்றில் காணலாம். எனவே, இவ்வாறு, செய்யுட்களின் பிரிவுகளுக்குத் தனித்தனிப் பெயர் வழக்கம் கொண்ட நூல்கள், எட்டுத்தொகையுள், இக் கலித்தொகையும், அகநானூறுமே[1] என்பது நினைத்தற்குரியது.

## நல்லந்துவனார்

இக் கலித்தொகையினைத் தொகுத்தவர், நல்லந்துவனார் என்பது, முன்பு[2] கூறப்பட்டது. இச் செய்தி, இந் நூலின் உரையாசிரியராகிய நச்சினார்க்கினியரால், இந் நூலின் தோற்றுவாயிலும், இறுதியிலும் குறிப்பிடப் பெற்றுள்ளது. எட்டுத்தொகையுள், தொகுத்தவர்களின் பெயர்கள் தெரியப் பெற்ற பிற தொகை நூல்களில், அவர்கள் இயற்றிய செய்

---

1. அகநானூற்றில் உள்ள களிற்றியானை நிரை, மணிமிடை பவளம், நித்திலக் கோவை என்பவை, தனித் தனிப் பெயர்களாக, உரையாசிரியர்களால், கூறப் பெற்றுள்ளன.

2. எட்டுத்தொகைச் செல்வம், பக்கம், 19.

யுட்கள், அவர்களால் தொகுக்கப்பட்ட தொகை நூல்களில் இல்லை. ஆனால், இக் கலித்தொகையினைத் தொகுத்த நல்லந்துவனார் இயற்றிய செய்யுட்கள், 34, இந் நூலில் இருப்பதுடன், இவர் இயற்றிய செய்யுட்கள், அகநானூறு, நற்றிணை, பரிபாடல் ஆகிய பிற தொகை நூல்களிலும் உள்ளன. இந் நூலில் உள்ள மருதக் கலியினை இயற்றிய மருதனிள நாகனார், தாம் இயற்றிய அகநானூற்றுச் செய்யுள் ஒன்றில்,[1] இந் நல்லந்துவனாரைப் பாராட்டியுள்ளார். மேலும், இந் நூலின் நெய்தற்கலியில் உள்ள செய்யுள் ஒன்றின்[2] உரையில், "சொல்லெச்சமும் குறிப்பெச்சமுமாகத் தம் பேரறிவு தோன்ற ஆசிரியர் நல்லந்துவனார் செய்யுட் செய்தார்" என, நச்சினார்க்கினியர், இவரைப் பாராட்டி எழுதியுள்ளார். இவை களிலிருந்து நல்லந்துவனார், புலவர் பாடும் புகழ் சான்ற பெரும் புலவர் என்பது விளங்கும்.

நல்லந்துவனார் என்னும் பெயர், நவ்வந்து வனார் எனவும் சில ஏடுகளில் காணப்படுகின்றது. இதனைக் கொண்டு, இவர் பெயரை, இந் நூலினைப் பதிப்பித்தவர்களுள் ஒருவராகிய இ.வை. அனந்த ராமையர் அவர்கள், நவ்வந்துவனார் என்பர்.

கலித்தொகைச் செய்யுட்களை இயற்றியவர்கள், மேற் கூறப்பட்ட ஐவர் என்றும், நல்லந்துவனார்

---

1. அகநானூறு, செய்யுள், 59. ''அந்துவன் பாடிய சந்துகெழு நெடுவரை''
2. கலித்தொகை, நெய்தற்கலி, செய்யுள், 25.

என்ற ஒருவரே என்றும், ஐவரும் அல்லர்; ஒருவரும் அல்லர்; பலர் என்றும் ஆராய்ச்சியாளர், பலவாறு கூறுவர். பலரால் இயற்றப் பெற்ற செய்யுட்களின் தொகுப்பாகிய எட்டுத்தொகை நூல்களுள் ஒன்ருக, இந்நூல், தொன்றுதொட்டு வழங்கப்பட்டு வருதலால், இந்நூல் முழுதினையும் ஒருவர் இயற்றினர் என்னும் கருத்துப் பொருந்துவதாகத் தோன்றவில்லை.

வேறு சில தொகை நூல்களில், சில செய்யுட்கள், சிதைந்தும், குறைந்தும் காணப்படுதல் போல் அன்றி, அடி எண் அளவினல் பெரிய செய்யுட்களைக் கொண்ட இக் கலித்தொகையில், நூற்றைம்பது செய்யுட்களும் முழு வடிவத்துடன் கிடைத்திருப்பது, நமது நற்பேருகும்.

**உரைகள்**

இந் நூலிற்கு நச்சினர்க்கினியர் எழுதிய சிறந்த உரை ஒன்று உள்ளது. இவ் உரையுடன். இந் நூலினை, 1887 ஆம் ஆண்டில், யாழ்ப்பாணம், ராவ் பகதூர், சி. வை. தாமோதரம் பிள்ளை அவர்கள் வெளியிட்டார்கள். பின்னர், இ. வை. அனந்தராமையர் அவர்கள், நச்சினர்க்கினியர் உரையுடன், தம் குறிப்புரையினைச் சேர்த்து, மூன்று பகுதிகளாகப் பிரித்து, 1925, 1931ஆம் ஆண்டுகளில், இந் நூலினை வெளியிட்டார்கள். அடுத்துப் பாகனேரி, தனவைசிய இளைஞர் தமிழ்ச் சங்கத்தினர், நச்சினர்க்கினியர் உரையுடன், இளவழகனர் எழுதிய உரை

விளக்கத்தினைச் சேர்த்து, 1938ஆம் ஆண்டில், இந் நூலினை வெளியிட்டனர்.

## கலிப்பாவின் சிறப்பும், ஓசை நயமும்

அகப்பொருளைப் பாடுதற்கு மிகப் பொருத்த மான பாக்கள், பரிபாடலும், கலிப்பாவும் ஆகும் என் பது, தொல்காப்பியனர் கருத்து. அக் கருத்திற்கு ஏற்ப, அகப்பொருளை அழகுற எடுத்துக் கூறிக் கலிப் பாவினல் அமைந்த நூல், இக் கலித்தொகையாகும். கலிப்பாக்கள், ஓசை நயம் மிக்கன. கலி என்னும் சொல்லிற்கு ஓசை என்ற பொருள் உண்டு. கலிப்பா, செய்யுள் முழுதும் ஒழுகிய ஓசையுடன் நடவாமல், கன்று துள்ளுதல் போல, இடையிடையே துள்ளி வரும் ஓசையினை உடையது. இவ் ஓசையினைத் துள்ளல் ஓசை என்பர். இன்பம் பற்றிய மன எழுச்சியைக் கூறுவதற்குத் துள்ளல் ஓசை பொருத் தம் உடையதாக இருக்கலாம். மேலும், தலைவன், தலைவி, தோழி முதலாயினோர், தம்முள் உடன் பட்டும், வேறுபட்டும் தம் கருத்துக்களை ஒருவருக்கு ஒருவர் விரிவாக வெளியிடுதற்கு ஏற்ப, இக் கலிப்பாப் பல வகை உறுப்புக்கள் கொண்ட அமைப் புடன் இருப்பதும் இது, அகப்பொருள் பற்றிக் கூறுதற்கு ஏற்றது ஆதற்குக் காரணம் ஆகலாம்.

## கலிப்பாவின் இலக்கணம்

இந் நூலில் உள்ள கலிப்பாக்கள், ஒத்தாழிசைக் கலி, கலிவெண்பா, கொச்சகக்கலி, உறழ்கலி என நான்கு வகையாக உள்ளன. இவற்றில் வரும்

உறுப்புக்கள் தரவு, தாழிசை, எகாசசகம், அராகம், அம்போதரங்கம், தனிச்சொல், சுரிதகம் எனப் பலவாம். ஒத்தாழிசைக்கலியில், தரவு, தாழிசை, தனிச்சொல், சுரிதகம் என்னும் நான்கு உறுப்புக்கள் வருகின்றன. இவற்றுள், தரவு என்பது, கூறத் தொடங்கிய பொருளைத் தோற்றுவாய் செய்வது போன்று முதலில் வரும். தாழிசை என்பது, கேட்பவர் உள்ளத்தில், அப்பொருள் நன்கு பதியும் வண்ணம், ஒரே வகை இனிய ஓசையில், மூன்று முறை விரித்து விளக்கிக் கூறுவதாய்த் தரவினை அடுத்து நிற்கும். சுரிதகம் என்பது, கூறிய பொருளை முடித்துக் காட்டுவதாய்ச் செய்யுளின் இறுதியில் நிற்கும். தனிச்சொல் என்பது, தாழிசைக்கும் சுரிதகத்திற்கும் இடையில், அவ் இரண்டினுக்கும் பொருள் தொடர்புபடுத்திக் காட்டுவதாய்த் தனியே வரும் சொல்லாகும். இத் தனிச்சொல், பொருள் இல்லாத அசை நிலையாய் நிற்றலும் உண்டு. இம் முறை, பெரும்பாலான ஒத்தாழிசைக் கலிப்பாக்களில் காணப்படுகின்றது. இதில், தரவு முதலிய பிற உறுப்புக்கள் இருப்பினும், தாழிசை, பொருட் சிறப்பும், பன்மையும், ஓசை நயமும் உடையது; ஆதலின், இச் செய்யுள், ஒத்தாழிசைக் கலி எனப் பெயர் பெற்றது. இப் பெயர், உறுப்பினால் பெற்ற பெயராகும். கலித்தொகையில், நூற்றைம்பது கலியுள்ளும் ஒத்தாழிசைக்கலி, அறுபத்தெட்டு வந்தது என்பர், நச்சினார்க்கினியர்.[1]

1. தொல்காப்பியம், செய்யுளியல், நூற்பா, 130, உரை.

கலிவெண்பா என்பது, வெளிப்படையாகக் கூறிய பொருளுடன் வேறும் ஒரு பொருளைத் தோற்று விப்பதாய், வெண்பாவைப் போல் முடிவு பெறு கின்றது. இது, கலி ஓசை பெற்றும், வெள்ளோசை தழுவியும் வருதலால், கலி வெண்பா எனப் பெயர் பெற்றது. கொச்சகம் என்பது, கொய்சகம் என் னும் சொல்லின் திரிபாகும். மகளிர், ஆடை உடுத்தும் போது, கைவிரல்களால் சிறிதும் பெரிதுமாக மடித்து உடுத்துதலைக் கொய்சகம் என்பர். அது போன்று, சிறிதும் பெரிதும் ஆகிய கலி உறுப்புக்களை மிகுதி யாகப் பெற்று வருதலால், இது, கொச்சகக்கலி என்னும் பெயர் பெற்றது. இதுவும் உறுப்பினுல் பெற்ற பெயராகும். உறழ்கலி என்பது, ஒருவர் கூறியதனை மற்ெருருவர் மறுத்துக் கூறுவதாய முறை, இடையிடையே கலந்து வருமாறு பாடப் படுவதாகும். இது, பொருளால் பெற்ற பெயர். இதன்கண், சுரிதகம் வாராது என்பர். இங்குக் கூறப்பட்ட பொது விதிகளில் சில, வேறுபட்டு வரு தலும் உண்டு. இந் நால்வகைக் கலிப்பாவிலும் உட்பிரிவுகள் பல உள்ளன. இவற்றையெல்லாம் இக் கலித்தொகையில் காணலாம்.

செய்யுள் அமைப்பு முறையில், சில இடங்களில், பரிபாடலிற்கும், கலிப்பாவிற்கும் வேறுபடுத்த முடியாத நிலை இருக்கின்றது. ஆயினும், வேறு பாடுகள் இருந்ததனுல்தான், பரிபாடலையும், கலிப் பாவையும் வேறு வேறு செய்யுட்களாகக் கொண்ட னர். ஆனுல், நச்சினுர்க்கினியர், பரிபாட்டையும் கலிப்பாட்டின் ஒரு வகையே என்று கருதுகின்ருர்.

தொல்காப்பியனாருக்குப் பின் வந்த ஆசிரியர்கள், கலிப்பாக்களுக்கு இலக்கணம் கூறியிருப்பினும், அவ்வந் நூல்களில் காணப்படும் எடுத்துக்காட்டுக்களும், தனி நூல் வடிவில் அமைந்த கலிவெண்பாக்களும், கலிப்பாவின் இனங்களும் தவிர, வேறு கலிப்பாக்கள், பின்பு தோன்றவில்லை. கலிப்பாக்கள், இயற்றுதற்கு எளியனவாக இல்லாமை, இதற்கு ஒரு காரணமாக இருக்கலாம்.

## நூற்பொருள்

அன்பின் ஐந்திணையைப் பற்றிய செய்யுட்களே அன்றிக் கைக்கிளை, பெருந்திணை ஆகிய திணைகளைப் பற்றிய செய்யுட்களும், அடியவர், வினைவலர் ஆகியோர் ஒழுக்கங்களைப் பற்றிய செய்யுட்களும் இந் நூலில் உள்ளன. இவற்றிற்கு இலக்கணம், தொல்காப்பியத்தில் காணப்படினும், இத்தகைய செய்யுட்கள், இந் நூலில் அன்றிப் பிற தொகை நூல்களில் இல்லை. இந் நூலில் உள்ள சில செய்யுட்கள், உரையாடல் முறையில் அமைந்துள்ளன. சில செய்யுட்கள், சிறுகதைகள் போலவும், நாடகக் காட்சிகள் போலவும் விளங்குகின்றன. குறிஞ்சிக் கலியில் உள்ள "சுடர்த்தொடீஇ கேளாய்"[1] என்று தொடங்கும் செய்யுள், சிறுகதைக்குச் சிறந்த எடுத்துக்காட்டாதலைப் பலரும் அறிவர். குறும்புக் குணம் உடைய இளைஞன் ஒருவனின் செயல் வழியாக, மறைச் செய்தி ஒன்றனைத் தலைவி, தோழிக்கு வெளிப்

1. குறிஞ்சிக்கலி, செய்யுள், 15.

படுத்துவதாக அமைந்த இச் செய்யுளில், தலைவியின் உள்ளன்பும், நுண்ணறிவும் ஒளிவிட்டு நகைச் சுவை மிளிர்தலைக் காணலாம். மேலும், நகைச் சுவை மிக்க சில செய்யுட்களும் இந் நூலில் உள்ளன. பாலைக்கலியில், இளவேனிற் காலத்தின் இயல்பு களைப் பல வகையாகப் புனைந்துரைக்கப் பெற்றிருக் கும் பகுதிகள், அக் காலத்தினை, நம் மனக் கண் முன் அழகுறக் காட்டுகின்றன.

## அரிய சொல்லாட்சி

இந் நூலில், சில அரிய சொல்லாட்சிகள் உள் ளன. இச் சொற்கள், சங்க இலக்கியங்கள் பிற வற்றில் காணுதற்கு அரியன. பிற்காலத்தனவாகக் கருதப்படும் சில சொற்களும் இந் நூலில் உள்ளன. இதனைக் கொண்டும், இந் நூலில் உள்ள சொல் அமைப்பு, பொருள் அமைப்பு முதலியவற்றைக் கொண்டும் இந்நூல், பிற தொகை நூல்களுக்குக் காலத்தால் பிற்பட்டது என்பர்.

## பாண்டிய நாட்டினைப் பற்றிய பாக்கள்

இந் நூலில், மதுரை, வையையாறு, திருமருத முன்றுறை முதலியவற்றைப் பற்றியும், பாண்டிய வேந்தரைப் பற்றியும் பல குறிப்புக்கள் காணப்படு கின்றன. ஆனால், சேர சோழ வேந்தர்களைப் பற்றி யும், அவர்களுடைய நாடு முதலியவற்றைப் பற்றியும் குறிப்புக்கள் காணப்படவில்லை. இதனால், இந்நூல், பாண்டிய நாட்டினைப் பற்றிய பாக்களைக் கொண்டது என்று கருதலாம். ஆயினும், சேர நாட்டு வேந்தனை

பெருங்கடுங்கோ, பாலைக்கலியினையும், சோழநாட்டு வேந்தனை நல்லுருத்திரன், முல்லைக்கலியினையும் பாடியிருப்பது நினைக்கத் தக்கது.

பெருங்கடுங்கோவின் செய்யுட்களாக, இக் கலித்தொகையிலும், பிற தொகை நூல்களிலும் உள்ள செய்யுட்களில், ஒன்று[1] நீங்கலாகப் பிற செய்யுட்கள் எல்லாம் பாலைத் திணையைப் பற்றியன வாகவே இருத்தலால், இச் சிறப்புப் பற்றி, இவர், பாலை பாடிய பெருங்கடுங்கோ எனப் பெயர் பெற்றார் எனக் கருதலாம்.

**பழங்காலக் கதைகள், பழக்க வழக்கங்கள், வேறு சில செய்திகள்**

இராமாயணம், பாரதம் ஆகிய நூல்களில் உள்ள செய்திகளும், புராணச் செய்திகளும் பிற தொகை நூல்களைக் காட்டிலும், இந் நூலில், மிகுதியாகக் காணப்படுகின்றன. இராவணன், கைலை மலையைப் பெயர்த்து எடுத்த செய்தி, இந் நூலில் உள்ளது. காடு ஒன்று, தீப்பற்றி எரிந்துகொண்டிருந்தது. அக் காட்டினுள், யானைகள் இருந்தன. யானைகளைச் சுற்றித் தீ எரிவதைக் கண்ட தலைமை பெற்ற ஆண் யானை ஒன்று, அவ் யானைகளைக் காக்க, அவற்றைத் தீயினின்றும் வெளியில் கொண்டு வந்தது. இச் செயலுக்குப் பாண்டவர் ஐவரும் அரக்கு மாளிகையில் இருந்தபோது, தீப்பற்றிக் கொண்டதாக, அப்போது, வீமன் என்பான், அவர்களைக் காக்க,

1. குறுந்தொகை, செய்யுள், 231.

அம் மாளிகையினின்றும் அவர்களை வெளியில் கொண்டுவந்த செயல், உவமையாகக் கூறப்பட்டுள்ளது.[1] சிவபெருமான், முருகன், திருமால், பலராமன், கண்ணன் முதலிய கடவுளரைப் பற்றிய செய்திகளும், பிற தொகை நூல்களில் இல்லாத காமன் வழிபாட்டுச் செய்தியும் இந் நூலில் உள்ளன; மேலும், முருகப்பெருமான் உறைவிடங்களாகிய திருச்செந்தூர், திருப்பரங்குன்றம் ஆகியவற்றைப் பற்றிய குறிப்பும் உள்ளது. வடநாட்டில் உள்ள, வாரணவாசி எனப்படும் காசி நகரத்தினைப் பற்றிய குறிப்பு, இந் நூலில், காணப்படுகின்றது. மதுரையில் தமிழ் ஆராய்ந்த செய்தி, இந் நூலில் உள்ளது.[2]

பண்டைக் காலத்தில், ஏறு தழுவி, அவ் ஏற்றினை அடக்குகின்ற ஆண்மகனை, ஆயர் குல மகள், மணம் செய்து கொள்வாள். ஏற்றினுக்கு அஞ்சி நடுங்கும் ஆண்மகனை, அம் மகள், இம்மையில் மட்டுமன்றி, மறுமையிலும் மணம் செய்து கொள்ள உடன்பட மாட்டாள்; என்னும் செய்தி, முல்லைக் கலியில் கூறப்பட்டுள்ளது.[3] இதனால், ஆயர் குல மகளிரின் சிறந்த வீர உணர்வு விளங்கும். மேலும், தமிழ் மக்களின் மண முறை, இன்ப நுகர்ச்சி ஆகியவற்றைச் சுவைபட, இந்நூற் செய்யுட்கள், எடுத்துக்காட்டுகின்றன.

---

1. கலித்தொகை, செய்யுள், 25.
2. கலித்தொகை, செய்யுள், 35.
3. முல்லைக்கலி, செய்யுள், 3.

பாலைக் கடைந்து நெய்யைப் பிரித்து எடுக்கும் வழக்கம், இந் நூலில்[1] கூறப்பட்டுள்ளது. இப் பகுதிக்கு நச்சினார்க்கினியர் எழுதிய உரையில், ஒரு வகை மருந்திட்டு, இவ்வாறு பிரித்து எடுப்பர் என்று குறிப்பிட்டுள்ளார். இக் காலத்தில், அறிவியல் வளர்ச்சியின் பயனாக, ஒருவகைக் கருவியினைக் கொண்டு, பாலில் வெண்ணெய் எடுக்கும் வழக்கம் இருப்பது, நினைக்கத் தக்கது.

## துன்பத்தில் துணை

தமிழ் மகளிர், தம் கணவருடைய இன்பத்தினையும், துன்பத்தினையும் தம்முடைய இன்பமும் துன்பமுமாகக் கருதுவர் என்பதனை எடுத்துக் காட்டும் முறையில், இந் நூலில் அமைந்துள்ள ஒரு செய்யுட் பகுதி, குறிப்பிடத் தக்கது. தலைவன் பிரிந்து செல்லும் குறிப்பினை அறிந்த தலைவி, அவன் செல்லும் கொடிய பாலை நிலத்தில் நேரும் துன்பத்திற்குத் துணையாகத் தன்னையும் அழைத்துச் செல்லுமாறு, தலைவனிடம் கூறினாள். இதனை விளக்க,

> "துன்பம் துணையாக நாடின் அதுஅல்லது
> இன்பமும் உண்டோ எமக்கு"[2]

என அமைந்த அடிகள், நம்மை இன்புறுத்துவனவாகும். தலைவனது பிரிவினால் உண்டாகும் துன்பத்தினைப் பொறுத்திருக்க இயலாமல், அவனுடன்

---

1. கலித்தொகை, செய்யுள், 110.
2. கலித்தொகை, செய்யுள், 6.

வருவேன் எனத் தலைவி கூறியதாகப் புலவர் பலர் சொல்வதைக் காட்டிலும் பிரிந்து செல்லும் வழியில் அவனுக்கு நேரும் துன்பத்தில் பங்கு கொள்ளத் துணையாக வருவேன் எனத் தலைவி கூறியதாக, இப் பகுதி, அமைந்திருத்தல், புதுமையும் சிறப்பும் ஆகும்.

## ஆறுதல் கூறும் அழகு

ஆறுதல் கூறும் முறையில், இந் நூலில் உள்ள ஓர் அழகிய செய்யுட் கருத்தினை இனிக் காண்போம். தலைவி, தலைவனுடன் அவனுடைய ஊருக்குச் சென்று விட்டாள். அதன் பின்னர், அச் செய்தியினை அறிந்த செவிலித்தாய், தலைவியைத் தேடிக் காட்டு வழியில் சென்றாள். அப்போது எதிரில் வந்த துறவிகளை நோக்கித் தலைவனுடன் சென்ற தன் மகளைக் கண்டீரோ என வினவினாள். அவ் வினாவிற்கு அவர்கள் கூறும் விடை, பின் வருமாறு உள்ளது.

"சந்தனம், மலையிலே பிறந்தாலும் அது, மலைக்குப் பயன்படாது. அதனை அரைத்துப் பூசுவோர்க்கே, அது பயன்படும். முத்து, கடல் நீரில் பிறந்தாலும் அது, கடலிற்குப் பயன்படாது. அதனைக் கோத்து அணிவோர்க்கே, அது பயன்படும். இசை, யாழில் பிறந்தாலும் அது, யாழிற்குப் பயன்படாது. அதனைக் கேட்பவர்க்கே, அது பயன்படும். அவை போல, நும் மகளும் பருவம் வந்த பின், நுமக்குப் பயன்பட மாட்டாள். அவளைக் கொண்ட கணவனுக்கே பயன்படுவாள். அவள், சிறந்த கணவனை வழிபட்டு அவனுடன் சென்றாள்

கற்பரசியாகிய அவளை நினைத்து வருந்தாதீர்" எனக் கூறப்பட்டுள்ளது.[1] மகளைப் பிரிந்து பெருந் துன்பம் அடைகின்ற தாய் ஒருத்தியின் உள்ளத்திற்கு இதனைக் காட்டிலும் சிறந்த முறையில், ஆறுதல் கூற இயலாது. இச் செய்யுள், உலகியலை இனிது விளக்குகின்றது.

## அறிவுரைகள்

வாழ்க்கைக்கு இன்றியமையாத அறிவுரைகள் பல, இந் நூலில், ஆங்காங்கு உவமைகளாகவும், பிறவாறும் கூறப்பட்டுள்ளன. மரங்கள், தலைசாய்ந் திருப்பதற்குச் சான்றோர்கள், தமது புகழைத் தம் முன்பு, பிறர் கூறக் கேட்டபோது, தலை குனிதல், இந் நூலில், உவமையாக உள்ளது.[2] இதிலிருந்து பண்டைத் தமிழ் மக்கள், புகழையும் விரும்பாத உயர்ந்த பண்பினர் என்பது அறியப்படுகின்றது. இப் பண்பு, குறுந்தொகையிலும்,[3] புறநானூற்றிலும்[4] கூறப்பட்டுள்ளது.

ஒருவன், மற்றொருவனிடம், கடனாகப் பொருள் பெற்றுக்கொள்ளும்போது, அவனது முகம், மலர்ச்சி அடைந்தும், அவ்வாறு கடனாகப் பெற்ற பொருளைத் திரும்பக் கொடுக்கும்போது, அவனது முகம், மலர்ச்சியின்றி வேறுபட்டும் இருத்தல், முற்காலத்

---

1. கலித்தொகை, செய்யுள், 9.
2. கலித்தொகை, செய்யுள், 119.
3. குறுந்தொகை, செய்யுள், 252.
4. புறநானூறு, செய்யுள், 152, 285.

தும், இக்காலத்தும் இவ் உலகத்தார் இயல்பு என்பது, இந் நூலில் உள்ளது.[1] இது, கடன் கொடுத்தலிலும், கொள்ளுதலிலும், உள்ள இன்ப துன்பங்களை, வாழ்வில் கண்டு உணர்ந்து கூறும் ஓர் அரிய அறிவுரையாகும்.

தோழி, தலைவனுக்கு அறிவுறுத்துவனவாக, இந் நூலில் வந்துள்ள, பின் வரும் அறிவுரைகள், அனைவரும் அறிந்து பின்பற்றுதற்கு உரியன.

"ஆற்றுதல் என்பதுஒன்று அலந்தவர்க்கு உதவுதல்
போற்றுதல் என்பது புணர்ந்தாரைப் பிரியாமை
பண்பெனப் படுவது பாடறிந்து ஒழுகுதல்
அன்பெனப் படுவது தன்கிளை செறாஅமை
அறிவெனப் படுவது பேதையார் சொல்நோன்றல்
செறிவெனப் படுவது கூறியது மறாஅமை
நிறையெனப் படுவது மறைபிறர் அறியாமை
முறையெனப் படுவது கண்ணோடாது உயிர்வௌவல்
பொறையெனப் படுவது போற்றாரைப் பொறுத்தல்"[2]

இவ் அடிகளில், ஆற்றுதல், போற்றுதல், பண்பு, அன்பு, அறிவு, செறிவு, நிறை, முறை, பொறை என்

1. கலித்தொகை, செய்யுள், 22.
2. கலித்தொகை, செய்யுள், 133.

னும் பண்புகளை, ஒரு சேரக் கூறி, அவற்றின் விளக்கங்களைச் சுருக்கமாகக் குறிப்பிட்டிருப்பது, புலவரின் நுண்மாண் அறிவினை எடுத்துக் காட்டுவதாகும்.

## பிள்ளைத் தமிழ்

அத்தா அத்தா என்று கூறுமாறு, குழந்தையிடம் சொல்லுதல்,[1] குழந்தையுடன் விளையாட வருமாறு, அம்புலியை அழைத்தல்,[2] சிறுமிகள் விளையாட்டாகக் கட்டிய சிறு வீட்டினைச் சிறுவர் சிதைத்தல்,[3] சிறுவர், சிறுதேர் உருட்டுதல்[4] ஆகிய குழந்தைப் பருவ நிகழ்ச்சிகள் பற்றிய குறிப்புக்கள், இந் நூலிலும், பிற தொகை நூல்களிலும்,[5] பத்துப்பாட்டிலும்[6] காணப்படுகின்றன. இவை, பிற்காலப் பிள்ளைத் தமிழ் நூல்களில், செங்கீரை[7] பருவம், அம்புலிப் பருவம், சிற்றிற் பருவம், சிறுதேர்ப் பருவம் ஆகிய பகுதிகளை அமைப்பதற்கு வழி காட்டின என்று கருதலாம். அம்புலிப் பருவத்தின் அடிப்படைக் கூறு, அகநானூற்றுச் செய்யுள் ஒன்றில் அமைந்திருப்பது, முன்பு, அகநானூறு பற்றிய பகுதியில்[8] கூறப்பட்டது.

---

1. கலித்தொகை, செய்யுள், 80.
2. கலித்தொகை, செய்யுள், 80. அம்புலி—திங்கள்.
3. கலித்தொகை, செய்யுள், 51.
4. கலித்தொகை, செய்யுள், 81.
5. குறுந்தொகை, செய்யுள், 61. ஐங்குறுநூறு, செய்யுள், 403.
6. பெரும்பாணாற்றுப்படை, அடி, 249. பட்டினப்பாலை, அடி, 24—25.
7. கீர்—சொல்.
8. எட்டுத்தொகைச் செல்வம், பக்கம், 44.

## 7. பரிபாடல்[1]

இந்நூல், பரிபாடல் என்னும் செய்யுளால் தொகுக்கப் பெற்றமையினுல், பரிபாடல் எனப் பெயர் பெற்றது. இது, பரிபாட்டு எனவும் பெயர் வழங்கப் பெறும். இது, "ஓங்கு பரிபாடல்" என ஆன்ருேர் புகழ்ந்த பெருமை உடையது. திருமாலுக்கு எட்டும், முருகவேளுக்கு முப்பத்தொன்றும், காடுகிழாளுக்கு[2] ஒன்றும், வையை ஆற்றிற்கு இருபத்தாறும்,[3] மதுரைக்கு நான்கும் ஆக, எழுபது

---

1. இந் நூலாசிரியரால் இயற்றப் பெற்று, 1942ல் வெளி வந்த கட்டுரைக் கோவை என்னும் நூலில், இப் பரி பாடலைப் பற்றி விரிவான கட்டுரை ஒன்று உள்ளது. இப் பரிபாடலைப் பற்றி மேலும் விரிவாக, இந் நூலாசிரி யர் எழுதும் தனி நூல் ஒன்றும் வெளிவரும்.
2. கார்கோளுக்கு என்றும் பாட வேறுபாடு உண்டு.
3. வையை ஆறு, இருபத்தாறு பாடல்களால், சிறப்பித்துப் பாடப் பெற்றிருத்தலால், நல்லந்துவனுர், 'இன்னி யல் மாண் தேர்ச்சி இசை பரிபாடல் பெற்ற வையை' (பரிபாடல், செய்யுள், 11. அடி-137.) என்று பாராட்டியுள்ளார். இளங்கோவடிகள், "புலவர் நாவில் பொருந்திய பூங்கொடி, வையை என்ற பொய் யாக் குலக்கொடி" என்று புகழ்ந்து கூறியிருப்பதும் இங்கு நினைக்கத் தக்கது.

செய்யுட்கள், இந் நூலில் இருந்தன. அவற்றுள், அழிந்தன போக, இப்போது இருப்பவை, இருபத்திரண்டு செய்யுட்கள் ஆகும். இவை, திருமாலைப் பற்றி ஆறும், முருகவேளைப் பற்றி எட்டும், வையை ஆற்றைப் பற்றி எட்டுமாக உள்ளன. இவை அல்லாமல், பழைய உரைகளில் காட்டப்பட்ட மேற்கோள்களிலிருந்து முழுச் செய்யுட்கள் இரண்டும், உறுப்புக்கள் சிலவும், புறத்திரட்டு முதலியவற்றிலிருந்து உறுப்புக்கள் சிலவும் கிடைத்துள்ளன. கிடைத்த முழுச் செய்யுட்கள் இரண்டில், ஒன்று, திருமாலுக்கு உரியது; மற்றொன்று, வையை ஆற்றிற்கு உரியது. கிடைத்த உறுப்புக்களுள், ஓர் உறுப்பு, வையை ஆற்றிற்கும், ஆறு உறுப்புக்கள், மதுரைக்கும் உரியனவாகக் காணப்படுகின்றன. சில உறுப்புக்கள், இன்ன பொருளைச் சார்ந்தன என்பது, விளக்கமாக அறிய இயலவில்லை. இவை அல்லாமல்,

"தெரிமாண் தமிழ்மும்மைத் தென்னம் பொருப்பன்
பரிமா நிரையிற் பரந்தன்று வையை"

என்னும் அடிகள் இரண்டும் பரிபாடலைச் சேர்ந்தன என்பது, நுண்பொருள் மாலையினால் தெரிகின்றது. இதிலிருந்து தமிழ் மொழியினை, முத்தமிழ் என, முதலாவதாகக் குறிப்பிட்ட நூல், பரிபாடல் என்பது அறியத்தகும். திருமாலிருஞ்சோலை மலைத் திருக்கோயிலில் உள்ள பழைய கல்வெட்டு ஒன்றில், இந் நூலில் உள்ள "புலவரை அறியா" என்று தொடங்கும் பதினைந்தாம் செய்யுள், காணப்படுகின்றது.

## பரிபாடலின் இலக்கணம்

பரிபாடற் பாவின் இலக்கணங்களைத் தொல் காப்பியத்தில் காணலாம். இப் பாக்கள், இனிய ஓசை நயம் உடையவை. இவை, நான்கு பாவானும் வந்து, பல அடியும் வருமாறு நிற்கும்; இருபத் தைந்து அடிச் சிற்றெல்லையினையும், நானூறு அடிப் பேரெல்லையினையும் பெற்று வரும்.[1]

## பாடினோர், இசை வகுத்தோர் பெயர்களும், பண்களும்

இந் நூலில் உள்ள செய்யுட்களுள், முதல் செய் யுளிற்கும், இருபத்திரண்டாம் செய்யுளிற்கும், பின்பு கிடைத்த முழுச் செய்யுட்கள் இரண்டிற்கும், உறுப் புக்களுக்கும் பாடினோர் பெயர், இசை வகுத்தோர் பெயர், பண்ணின் பெயர் முதலிய செய்திகள் கிடைக்கவில்லை. ஏனைய செய்யுட்கள் ஒவ்வொன் றின் இறுதியிலும் பாடினோர் பெயரும், இசை வகுத்தோர் பெயரும், பண்ணின் பெயரும் குறிப்பிடப் பெற்றுள்ளன. தெரிந்தவரை, இவற்றை இயற்றிய புலவர்கள், பதின்மூவர் ஆவர். இவற் றுள், இரண்டாம் செய்யுள் முதல், பன்னிரண்டாம் செய்யுள் முடிய உள்ள பதினொரு செய்யுட்களுக்கு உரிய பண், பாலை யாழ் என்பதும், பதின்மூன்றாம் செய்யுள் முதல், பதினேழாம் செய்யுள் முடிய உள்ள ஐந்து செய்யுட்களுக்கு உரிய பண், நோதிறம் என்ப தும், பதினெட்டாம் செய்யுள் முதல், இருபத்

---

1. தொல்காப்பியம், பொருளதிகாரம், நூற்பா, 475.

தொன்றும் செய்யுள் முடிய உள்ள நான்கு செய்யுட் களுக்கு உரிய பண், காந்தாரம் என்பதும் காணப் படுகின்றன. பதின்மூன்றும் செய்யுளிற்கு இசை வகுத்தவர் பெயர், காணப்படவில்லை. ஏனைய செய் யுட்களுக்கு இசை வகுத்தவர் பெயர்களாகப் பதின் மர் பெயர்கள் உள்ளன. பதினன்காம் செய்யுளிற்கு அதனை இயற்றிய புலவர் கேசவனாரே, இசையும் அமைத்துள்ளார். மற்றைய செய்யுட்களுக்கு இசை அமைத்தவர்கள், வேறாகக் காணப்படுகின்றனர். அவற்றுள், 15, 16, 17, 18, 20 ஆம் செய்யுட்களுக்கு, இருபத்தொன்றும் செய்யுளை இயற்றிய நல்லச்சு தனர், இசை அமைத்துள்ளார். இதனால், இயற்றமிழ், இசைத்தமிழ் ஆகிய இரண்டிலும் புலமை பெற்ற வர்கள், இந்நூற் செய்யுட்கள் சிலவற்றை இயற்றி இருக்கின்றனர் என்பது, அறியப்படுகின்றது. இந்நூற் செய்யுட்களுக்கு இசை வகுக்கப்பட்டிருக் கும் முறை, இன்ன முறையைப் பின்பற்றியது என் பது, புலனாகவில்லை. இசை வகுத்தோர் பெயர் களாக அறியப்படும் பத்தினுள், கண்ணனாகனார், நந்நாகனார், நன்னாகனார், நாகனார், பெட்டனாகனார் என்னும் பெயர்கள் இருத்தலை நோக்கும்போது, நாகர் என்பது, இசை வல்ல ஒரு மரபினரின் பெயரோ என்ற எண்ணம் தோன்றுகிறது.

இந்நூற் செய்யுட்களுக்குப் பண் வகுத்திருக்கும் அமைப்பினை நோக்கினால், இந்நூற் செய்யுட்கள், தேவாரப் பாடல்கள் போலப், பண்டைக் காலத் தில், பண்ணுடன் பாடப்பட்டன என்பது புலனாகும். மேலும், இந் நூலின் முதற் செய்யுள் உரை இறுதி

யில், பரிமேலழகர், "பரிபாட்டு என்பது, இசைப்பா ஆதலான்" என்று எழுதியிருத்தலும் நினைக்கத் தக்கது. இந்நூற் செய்யுட்கள், முற்காலத்தில் இசையுடன் பாடப்பட்டன என்னும் குறிப்பு, இந் நூலின் உரைச் சிறப்புப் பாயிரத்திலும் காணப்படு கின்றது. பண்டைத் தமிழ் இசைக்கு, இப்போது உள்ள பாடல்களுள், இப் பரிபாடல் பாக்கள், மிகப் பழமையானவை; இதனால், தமிழ் மக்களுடைய இசைப் பயிற்சி, மிகத் தொன்மையானது என்பது தெளிவாகும்.

## இந் நூலிற்குப் பின் பரிபாடல் பா

இந் நூலிற்குப் பின், பரிபாடல் என்னும் பாட்டு வகை, தனியாகவேனும் நூலாகவேனும் தோன்றவில்லை. மேலும், சங்க காலத்திற்குப் பின் எழுந்த செய்யுள் இலக்கண நூல்களில், பரிபாட லிற்கு இலக்கணம் கூறப் பெறவும் இல்லை.[1] இதனால், பரிபாடல் பா, சங்க காலத்திற்குப் பின், வழக்கிழந்து விட்டது என்பது, தெரிகின்றது. பண் அமைத்து, இசையுடன் பாடுதற்கு உரிய பரிபாடல் பாக்களைப் பாடும் முறை, பின்வந்தோரால், அறி யப்படாமையினால், இப் பாடல், வழக்கு இழந்தது என்று கருதலாம். முத்தமிழ் வளர்ச்சி குன்றிய

1. திருக்குருகைச் சடகோபாழ்வார் சந்நிதிக் கவிராயர் மரபில் இருந்த கவிஞர் ஒருவர் மட்டும் தாம் இயற்றிய பாப்பாவினம் என்ற நூலில், பரிபாடல் பாக்கள் நான் கினை இயற்றிச் சேர்த்துள்ளார்.

இருண்ட காலமும் (கி. பி. 300—கி.பி. 600) பாடும் முறை மறைந்ததற்குக் காரணமாக இருக்கலாம்.

### பரிமேலழகர் உரை

திருக்குறளிற்கு உரை கண்ட பரிமேலழகர், இந் நூலிற்கு உரை எழுதியுள்ளார். இவ் உரை, சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் இயல்பு உடையது. இவ் உரை இன்றேல், இந் நூலில் உள்ள நுண் பொருள்களைக் கண்டு இன்புறுதல் இயலாது. இவ் உரை தோன்றிய வரலாற்றினைக் குறிக்கும் உரைச் சிறப்புப் பாயிரம்[1] ஒன்றும் உள்ளது. இவ் உரையுடன், தம் குறிப்புரையினையும், ஆராய்ச்சி முகவுரையினையும் சேர்த்து, டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்கள், 1918 ஆம் ஆண்டில், இந் நூலினை வெளியிட்டுள்ளார்கள். பின்பு கிடைத்த இரண்டு முழுச் செய்யுட்களுக்கும், உறுப்புக்களுக்கும் பரிமேலழகர் உரை கிடைக்கவில்லை.

### பரிபாடற் பொருள்

பரிபாடல் பா, தெய்வமும், காமமும் பொருளாக வரும் என்பது, அறிஞர்களுக்கு ஒப்ப முடிந்தது.

---

1. கந்தியார் என்பவராலும், பாடல்களின் பொருள் தெரியாமல், பாடல்களை எழுதியவர்களாலும், பாடகர்களாலும் இந்நூல், பல திறப்பட்ட பிழைகளை அடைந்தது என்பதும், இப் பிழைகளைக் கண்ட பரிமேலழகர், இப் பிழைகளை நீக்கி, உண்மையான பாடத்தினை உணர்த்தி, உரை எழுதினார் என்பதும் இவ் உரைச் சிறப்புப் பாயிரத்தில் புலனாகின்றன.

எனவே, இந்நூல் பேரின்பமும், சிற்றின்பமும் ஆகிய இரு வகை இன்பப் பகுதிகளையும் கூறுவது என்பது, இங்கு உணரத் தக்கது. இந் நூலில் காணப்படும் வையை ஆற்றினைப் பற்றிய செய்யுட்கள், பெரும்பாலும் அகப்பொருள் தழுவியனவாக உள்ளன. ஏனைய செய்யுட்களில் பெரும்பான்மையானவை, கடவுளரைப் பற்றியன.

தமிழ் மொழிக்குச் சிறப்பாக உரியது எனக் கூறப்படும் களவு ஒழுக்கத்தின் மாண்பும், இக் களவு ஒழுக்கத்தினை மேற்கொண்டமையினால், வள்ளியம்மை சிறந்தவாறும் இந் நூலில், ஒன்பதாம் செய்யுளில், எடுத்துரைக்கப் பெற்றுள்ளன. மேலும், இச் செய்யுளில், வள்ளி, தேவசேனை ஆகிய இருவரும் ஒருவரோடு ஒருவர் மாறுபட்டு, முருகப் பெருமானிடம் ஊடல் கொண்ட செய்தியும், இதன் தொடர்பாக, இவ் இருவரின் பாங்கியர் கூட்டமும் போர் மேற்கொண்ட செய்தியும் நகைச் சுவை சிறப்பக் கூறப்பட்டுள்ளன.

**மதுரை**

இந் நூலின்கண், மதுரையைப் பற்றிய பல செய்திகள் காணப்படுகின்றன. "மதுரை நகரின் நடுவில், இறைவனின் திருக்கோயிலும், அக் கோயிலின் நான்கு பக்கங்களிலும் ஒன்றன்பின் ஒன்றாக, வரிசையான தெருக்களும் அமைந்திருந்தன. இம் மதுரை நகர், திருமாலின் திருவுந்தித் தாமரையை ஒக்கும்; தெருக்கள், அத் தாமரையின் இதழ்களை நிகர்க்கும்; இறைவனின் திருக்கோயில், அத் தாம-

ரைக் கொட்டையை ஒக்கும்; தமிழ்க் குடிமக்கள், அதன் தாதினை ஒப்பர்; பரிசிலர், அத் தாதினை உண்ணும் வண்டுகளைப் போல்வர்;'' என, இவ்வாறு, மதுரை மாநகரின் அமைப்பு, ஓவிய அழகு பெற, இந் நூலில், கூறப் பெற்றுள்ளது.[1]

## திருமருத முன்துறை

வையை ஆற்றின் கரையில், மருத மரம் அடர்ந்த சோலை ஒன்று இருந்தது. அதன் வழியாக மக்கள் சென்று, ஆற்றில் நீராடி வந்து, தத்தம் ஆடை அணிகலன்களைப் புனைந்து கொள்ளுதலும், ஆடல் பாடல் நிகழ்த்துதலும் உண்டு என்பது தெரிகின்றது. இந்த இடத்தினைத் திருமருத முன்துறை என்பர். இது பற்றிய குறிப்புக் கலித்தொகையிலும் காணப் படுகின்றது.[2]

## திருப்பரங்குன்றும், திருமாலிருஞ்சோலை மலையும்

மதுரை நகருக்குத் தென்மேற்குத் திசையில் உள்ள திருப்பரங்குன்றமும், வடக்குத் திசையில் உள்ள திருமாலிருஞ்சோலை மலையும்[3] ஆகிய மலைகள் இரண்டனைப் பற்றிய செய்திகள், இந் நூலில் காணப்படுகின்றன. திருப்பரங்குன்றத்தில், முருகப் பெருமானும், திருமாலிருஞ்சோலை மலையில், திருமாலும் வீற்றிருக்கின்றனர். திருப்பரங்

1. பரிபாடல், உறுப்பு, 7.
2. கலித்தொகை, செய்யுள், 26.
3. திருமாலிருஞ்சோலை மலை என்பது, இப்போது, அழகர் மலை என வழங்கப்படுகிறது.

குன்றத்தில் இருந்த எழுது எழில் மண்டபத்தில், அகலிகை, சாபம் பெற்ற நிகழ்ச்சி, ஓவியமாகத் தீட்டப் பெற்றிருந்த செய்தி, இந் நூலில் உள்ளது.[1] இதனால், அக்காலத் திருக்கோயில்கள், ஓவியக் கலையினையும், அதன் வாயிலாக, நல்லொழுக்கத்தினையும் வளர்க்கும் இடங்களாக இருந்தன என்பதனை அறியலாம். திருப்பரங்குன்றத்தினைப் பற்றி, மதுரை ஆசிரியர் நல்லந்துவனார், சிறப்பாகப் பாடியுள்ளார். இதனைக் கண்ட மருதனிளநாகனார், "அந்துவன் பாடிய சந்துகெழு நெடுவரை" என்று பாராட்டிப் பாடினார். பாண்டிய வேந்தர், அரசியுடன் சென்று, திருப்பரங்குன்றத்தில் உள்ள முருகப் பெருமானை வழிபட்டார் என்ற செய்தியும் இந் நூலில் உள்ளது. திருமாலிருஞ்சோலை மலையில், திருமாலுடன் பலதேவனும் வீற்றிருக்கும் செய்தி தெரிகின்றது. மேலும், இம் மலையில் உள்ள சுனை, அருவி, சிலம்பாறு முதலியவை பற்றிய வளங்கள், இனிது எடுத்துரைக்கப் பெற்றுள்ளன. ஆற்றிற்குச் சென்று நீராடுதல், சோலைகளில் தங்கி, உண்டு மகிழ்ந்து விளையாடுதல் ஆகிய இன்பப் பொழுதுபோக்குச் செயல்கள், இந் நூலில், கூறப்பட்டுள்ளன.

இந்நூற் செய்திகள், மதுரை நகரினையும், அதனைச் சார்ந்த பகுதிகளையும் பற்றியனவாக இருத்தலால், இந்நூல், பாண்டிய நாட்டினைப் பற்றியதாக இருத்தல் நினைக்கத் தக்கது.

---

1. பரிபாடல், செய்யுள், 19, அடி, 50-52.

**மார்கழி நீராடல்**

மார்கழி மாதத்தில், நாட்காலையில், மகளிர் நீராடுவர் என்பது, இந் நூலில் காணப்படுகின்றது. கன்னியர், தம் தாயரொடு நீராடுதலால், மார்கழி நீராடல், அம்பா ஆடல் என, இந் நூலில், குறிக்கப் பட்டுள்ளது.[1] இவ் அம்பா ஆடலே, பிற்காலத்தில், திருவெம்பாவையாக மாறிச் சயாம் நாடு வரையில் பரவியது எனவும், இதனைச் சயாம் நாட்டினர், லோரிப்பாவாய் என்றும், லோ—ஜின்—ஜா என்றும் சொல்கின்றனர் எனவும் கூறுவர். மார்கழி மாதத்தில், நிறைமதியும் திருவாதிரையும் கூடிய நன்னாளில், திருவாதிரைக்குத் தெய்வம் ஆகிய சிவ பெருமானுக்கு விழாத் தொடங்கப் பெறும். அந்தத் தொடக்க நாள் முதல், அவ் விழா முற்றுப்பெறும் வரையும் இளங் கன்னியர்கள், தத்தம் தாய்மா ருடன், விடியற் காலையில், வையையில் நீராடுவர். மார்கழித் திருவாதிரையில் தொடங்கித் தை மாதத் தில் முற்றுப் பெறுவதனால், இந்த நீராட்டு விழா, மார்கழி நீராட்டு என்றும், தைந் நீராட்டு என்றும் கூறப்படும். மணமாகாத கன்னியர்கள், இவ்வாறு நீராடினால், அவர்களுக்குச் சிறந்த கணவர் வாய்ப்பர் என்ற நம்பிக்கையினால், இந் நீராடல், நடைபெற்று வந்தது. இவ் விழா, திருவாதிரைக்குப் பத்து நாள் முன்னர்த் தொடங்கித் திருவாதிரையுடன் முடிந்த காலமும் உண்டு. இக் காலத்தில், மார்கழி மாதம் முழுதும், இவ் விழாக் கொண்டாடப்படுகிறது. இவ்

---

1. பரிபாடல், செய்யுள், 11, அடி, 81.

விழாவினைப் பற்றிய குறிப்பு, ஐங்குறுநூறு,[1] கலித்தொகை[2] முதலிய பிற தொகை நூல்களிலும் காணப்பெறுகின்றது. எனவே, இந்நீராட்டு விழா, பண்டைத் தமிழ் மக்களால், பெரிதும் போற்றிக் கொண்டாடப்பட்டது என்பது புலப்படும்.

## சூள் உரைக்கும் முறை

சூள் உரைக்கும் பழக்கம், தமிழ் மக்களிடத்தில் இருந்தது; அவ்வாறு சூள் உரைக்கும்போது, தெய்வத்தின்மேல் ஆணையாகவேனும், சிறந்தோர்மேல் ஆணையாகவேனும் சூள் உரைத்தலும், முன்னின்றார் தலையைத் தொட்டுச் சூள் உரைத்தலும் உண்டு. இந் நூலில், திருப்பரங்குன்றத்தின் தலையைத் தொட்டுத் தலைவன் சூள் உரைத்தான் எனக் கூறப்பட்டுள்ளது.[3]

## வான நூல் பயிற்சி

மேற்குத் தொடர்ச்சி மலையில் மழை பொழிந்து, வையை ஆற்றில் புதுவெள்ளம் பெருகி வருதல் பற்றிய செய்தியும், அப்போது நிகழும் செயல்களும் இந் நூலில் கூறப்பட்டுள்ளன.[4] இம் மழை பெய்தற்கு ஏற்ற காரணமான கோள்கள் அமைந்திருந்த முறை, இந் நூலில்[5] விளக்கமாக உணர்த்தப்பட்

1. ஐங்குறுநூறு, செய்யுள், 84.
2. கலித்தொகை, செய்யுள், 59.
3. பரிபாடல், செய்யுள், 6, அடி, 95.
4. பரிபாடல், செய்யுள், 11, 12.
5. பரிபாடல், செய்யுள், 11.

டுள்ளது. இக் கோள் நிலையைக் கொண்டு, இந் நூலில் குறிக்கப் பெற்ற காலம், கி. மு. 161ஆம் ஆண்டு ஆகும் என, அறிஞர்,[1] வரையறுத்துள்ளனர். இக் கருத்து அமைந்து, இந் நூலில் உள்ள பதினொன்றும் செய்யுள், பழங்காலத் தமிழ் மக்களின் வான நூல் பயிற்சிக்குத் தக்க சான்றாகும்.

## உயர்ந்த நோக்கம்

"நுகரப்படும் பொருள்களையும், அவற்றை உளவாக்கும் பொன்னையும் இவ் இரண்டாலும் நுகரும் நுகர்ச்சியையும் மக்கள், முருகப் பெருமானிடம் வேண்டினர் அல்லர். வீடுபேற்று இன்பம் பயக்கும் அவன் அருளினையும், அவ் அருளினை அவன் செய்தற்குத் தம்பால் உண்டாக வேண்டிய அன்பினையும், இவ் இரண்டினாலும் வரும் அறத்தினையுமே[2] அப் பெருமானிடம் வேண்டினர்."[3] என, இந் நூலில் கூறப்பட்டிருப்பதனால், அக்காலத் தமிழ் மக்களுடைய கடவுள் வழிபாட்டின் உயர்ந்த நோக்கம் புலப்படும்.

கீரந்தையார் என்னும் புலவர், திருமாலை நோக்கி வரம் வேண்டும்போது, எங்களுடைய அறிவு, பொருளல்லாதனவற்றைப் பொருளாகக் கருதாமல், மெய்ப்பொருளையே உணர வேண்டும்

---

1. இலக்கண விளக்க பரம்பரைச் சோமசுந்தர தேசிகர்
2. அறம்—முருகப் பெருமான் குணங்களை அறிந்து மேற்கொண்டு, அவனை வழிபடுதலாகிய அறம்.
3. பரிபாடல், செய்யுள், 5, அடி, 78—81.

எனக் கேட்கின்றார்.[1] இதனால், மெய்ப்பொருள் உணர்ச்சியில் ஈடுபட்ட தமிழ் நெஞ்சத்தின் இயல்பினை அறியலாம்.

**கடவுள் நூல்**

இந் நூலில், செவ்வேளைப் பற்றியும், திருமாலைப் பற்றியும், அவர்களை வழிபடும் முறைகளைப் பற்றியும் மிகுதியாகக் கூறப்பட்டிருத்தலினால், இந் நூலினைக் கடவுள் நூல் என்று சொல்லலாம். எட்டுத்தொகையினையும், பத்துப்பாட்டினையும் நோக்கும்போது, செவ்வேளையும், திருமாலையும் பற்றிக் கூறப்படும் தனிச் செய்யுட்கள், இப் பரிபாடலில் உள்ள செய்யுட்களும், பத்துப்பாட்டில் முதலாவதாகிய திருமுருகாற்றுப்படையும், தொகை நூல்களில் உள்ள கடவுள் வாழ்த்துச் செய்யுட்களும் அன்றி, வேறு இல்லை என்பது விளங்கும். ஆயினும், இவ் இரு கடவுளரையும் பற்றிய குறிப்புக்கள், எட்டுத்தொகையிலும், பத்துப்பாட்டிலும் இடையிடையே காணப்படுகின்றன. முருகப்பெருமானின் பிறப்பு வரலாறு, இந் நூலில் கூறப் பெற்றிருப்பதற்கும், பிற்கால நூல்களில்[2] கூறப் பெற்றிருப்பதற்கும் பெரிதும் வேறுபாடு உண்டு. மேலும், இந் நூலில், புராண வரலாறுகள், பலவும், வேதக் கருத்துக்கள் சிலவும் கூறப் பெற்றுள்ளன.

---

1. பரிபாடல், செய்யுள், 2, அடி, 75—76.
2. கந்தபுராணம் முதலிய நூல்கள்.

## சில சொல் ஆட்சிகள்

கவிதை என்னும் சொல்லாட்சி, முதன்முதலாக, இந் நூலில் உள்ளது.[1] நெய்தல், குவளை, ஆம்பல், சங்கம், கமலம், வெள்ளம் என்னும் எண்ணுப் பெயர்கள், இந்நூலில் உள்ளன.[2] ஒன்பது என்ற எண்ணுப் பெயர், தொண்டு என இந் நூலில், ஆளப்பட்டுள்ளது.[3]

---

1. பரிபாடல், செய்யுள், 6 அடி, 8.
2. பரிபாடல், செய்யுள், 2, அடி, 13—14.
3. பரிபாடல், செய்யுள், 3, அடி, 79.

# 8. பதிற்றுப்பத்து

இந்நூல், நூறு ஆசிரியப் பாக்களை உடையது. சேர வேந்தர் ஒவ்வொருவரைப் பற்றிப் பத்துப் பத்துச் செய்யுட்கள் கொண்ட பகுதிகள் பத்தினால், தொகுக்கப் பெற்றமையால், இந்நூல், பதிற்றுப் பத்து[1] எனப் பெயர் பெற்றது. இப் பகுதிகள் பத்தும் முதற் பத்து, இரண்டாம் பத்து என்ற முறையில், பத்தாம் பத்து வரை பெயர் பெற்றுள்ளன. இவற்றுள், முதற் பத்தும், பத்தாம் பத்தும் இப்போது கிடைக்கவில்லை. இடையில் உள்ள எட்டுப் பத்துக்களே கிடைத்துள்ளன, இவை எட்டும் சேர வேந்தர் எண்மரைப் பற்றிப் புலவர் எண்மரால் பாடப் பெற்றவை. தொல்காப்பியப் பொருளதிகார உரையிலும், புறத்திரட்டிலும் இந்நூற் செய்யுட்கள், மேலும் சில, காணப்படுகின்றன. இச் செய்யுட்கள், முதல் பத்து, பத்தாம் பத்து ஆகியவற்றுள், இன்ன பத்தினைச் சேர்ந்தவை என்பது தெரியவில்லை. இந் நூற் செய்யுட்கள், சொற்செறிவு மிகப் பெற்றவை. இந் நூலில், சேர வேந்தர்களைப் பற்றிய செய்திகள், விரிவாகக் கூறப் பெற்றுள்ளன.

---

1. பதிற்றுப்பத்து என்பதற்குப் பத்தாகிய பத்து என்பது பொருளாகும்.

### நூலின் பெயர் அழகு

இந் நூலிற்குப் புறம்நூறு என்றேனும், வேறு வகையிலேனும் பெயரிடலாம் எனினும் அவ்வாறு பெயரிடாமல், பதிற்றுப்பத்து என இட்ட பெயர், மிகுந்த பொருட் செறிவு உடையது. அஃதாவது— இந் நூலில், பகுதிகள், பத்து உள்ளன; ஒவ்வொரு பகுதியிலும் செய்யுட்கள், பத்து உள்ளன. பகுதிகள் பத்தினையும் பாடிய புலவர்கள், பதின்மராவர்; பகுதிகள் பத்திலும் பாடப்பட்ட சேர வேந்தர், பதின்மராவர்; எனப் பத்து என்னும் எண்ணினைக் கொண்ட செய்திகள் பலவற்றை நினைவூட்டுகின்ற பெயராக, இப் பதிற்றுப்பத்து என்னும் பெயர் அமைந்துள்ளது. இப் பெயரின் சிறப்பும், அழகும் நினைந்து இன்புறுதற்கு உரியன.

### பெண்பாற் புலவர்

இந்நூற் செய்யுட்களை இயற்றிய புலவர்களுள், ஆறும் பத்தினை இயற்றிய காக்கை பாடினியார் நச்செள்ளையார் என்ற ஒருவரே, பெண்பாற் புலவராவர். எட்டுத்தொகை நூல்களுள், ஐங்குறுநூற்றிலும், கலித்தொகையிலும், பரிபாடலில் இப்போது கிடைத்துள்ள அளவிலும் பெண்பாற் புலவர்களின் செய்யுட்கள் காணப்படவில்லை. எனவே, ஒரு பொருள் பற்றிப் பாடப் பெற்று ஒருங்கு அமைந்த பல செய்யுட்களேனும்,[1] அடிகளால் நீண்ட பெரும்

---

1. இது, ஐங்குறுநூற்றிலும், கலித்தொகையிலும் ஒவ்வொரு திணை பற்றி ஒருங்கு சேர்ந்து அமைந்திருக்கும் பல செய்யுட்களைக் குறிப்பதாகும்.

செய்யுட்களேனும்[1] பெண்பாற் புலவர்கள் இயற்றியனவாக, எட்டுத்தொகையில், பெரும்பாலும் இல்லை என்பது, நினைத்தற்கு உரியதாகும்.

**உரைகள்**

இந் நூலிற்குப் பழைய உரை உள்ளது. இது, திட்பமும், நுட்பமும் செறிந்த உரையாகத் திகழ்கின்றது. இவ் உரை, சொற்பொருளை இனிது விளக்கியும், சொல் முடிபு, பொருள் முடிபுகளைப் புலப்படுத்தியும், பழைய செய்திகள் சிலவற்றை விளக்கியும் அமைந்துள்ளது. இலக்கணக் குறிப்புக்களை நுட்பமாக எழுதுவதில், இவ் உரையாசிரியர் வல்லவர். மேலும், ஒவ்வொரு செய்யுளின் கீழும் அமைந்துள்ள துறை, வண்ணம், தூக்கு ஆகியவற்றை விளக்க வேண்டிய இடங்களில் விளக்கியும், செய்யுட்களுக்கு உரிய பெயர்க் காரணங்களை அங்கங்கே புலப்படுத்தியும் இவ் உரை செல்கின்றது. இவ் உரையாசிரியர், தம் உரைக்கு இடையில், 'சின்னூல்' என்பதனை, மேற்கோளாகக் குறிப்பிட்டுள்ளார்.[2] சின்னூல் என்பது, குணவீர பண்டிதர் இயற்றிய நேமிநாதத்திற்கு உரிய பெயராகும். ஆதலால், இவ் உரையாசிரியர், நேமிநாதம் இயற்றிய குணவீர பண்டிதருக்குப் பிற்பட்டவராதல் வேண்டும். இவ் உரையாசிரியரின் பெயர் முதலியவற்றை அறிய இயலவில்லை.

---

1. இது, பரிபாடல் செய்யுட்களைக் குறிப்பதாகும்.
2. பதிற்றுப்பத்து, செய்யுள், 76, உரை.

இப் பழைய உரையுடன், தம் குறிப்புரையும், ஆராய்ச்சி முகவுரையும் சேர்த்து, 1904ஆம் ஆண்டில், இந் நூலினை, டாக்டர், உ. வே. சாமிநாதையர் அவர்கள், வெளியிட்டுள்ளார்கள். பின்பு, ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை அவர்கள், இந் நூலிற்கு விளக்கமாக எழுதிய உரை, 1950ஆம் ஆண்டில், வெளிவந்தது. பின்னர், இலங்கை, பண்டிதர் சு. அருளம்பலவனார் அவர்கள், இந் நூலிற்கு ஆராய்ச்சி உரை ஒன்று எழுதி, அதனைப் பழைய உரை, ஒப்புமைப் பகுதி முதலியவற்றுடன் சேர்த்து, இரண்டு பகுதிகளாக வெளியிட்டுள்ளார்கள். அதன் இரண்டாம் பகுதி, வெளிவந்த ஆண்டு, 1963.

## துறை, வண்ணம், தூக்கு, பெயர்

இந் நூலில், ஒவ்வொரு செய்யுளின் கீழும் அவ்வச் செய்யுளிற்கு உரிய துறை, வண்ணம், தூக்கு, பெயர் என்பன, குறிக்கப் பெற்றுள்ளன. இவை, உரை இல்லாத ஏடுகளிலும் இருத்தலால், இவை, இந் நூலின் உரையாசிரியரால் எழுதப்பட்டன என்று சொல்லுதல் இயலாது. பத்துக்களைப் பாடிய புலவர்களாலேனும், இந் நூலினைத் தொகுத்தவராலேனும், இவை, குறிப்பிடப் பெற்றிருத்தல் வேண்டும். இந் நூலில் உள்ள துறைகளின் பெயர்கள், புறநானூற்றிலும் காணப்படுகின்றன. ஆனால், வண்ணம், தூக்கு, பெயர் என்பன, இந் நூலில் அன்றிப் பிற தொகை நூல்களில் இல்லை. இந் நூலில் உள்ள செய்யுட்களுக்குத் துறைகள் கூறப்பட்டுள்ளனவே

அன்றித் திணைகள் கூறப்படவில்லை. இதற்குக் காரணம், இந் நூலில் உள்ள எல்லாச் செய்யுட்களும் புறத்திணை வகைகளுள் ஒன்றாகிய, பாடாண் திணையினைச் சேர்ந்தனவாக இருத்தலேயாகும்.[1]

### செய்யுட்களின் பெயர்கள்

இந் நூலின் ஒவ்வொரு செய்யுளிற்கும் அவ்வச் செய்யுளில் அமைந்த பொருள் நலம் சிறந்த சொற்றொடரைப் பெயராகக் குறிப்பிட்டிருப்பது, நுண்ணுணர்வினைப் புலப்படுத்தும் புதியதொரு முறையாகும். பத்துப்பாட்டினுள் ஒன்றாகிய மலைபடுகடாம் என்னும் பாட்டின் பெயரும் இவ்வாறு அமைந்தது என்பது, முன்பு[2] கூறப்பட்டது. இந்நூற் செய்யுட்களின் பெயர்ப் பொருத்தத்தினைப் பழைய உரையாசிரியர், ஆராய்ந்து கூறும் திறன், பாராட்டுதற்கு உரியது. எடுத்துக்காட்டாக, இந் நூலின் பதின் மூன்றாம் செய்யுளிற்குப் 'பூத்த நெய்தல்' என்னும் பெயர் அமைந்த பொருத்தத்தினைக் காண்போம்.

மக்களுள் சிலர், தம் உயிரை வழங்கியும் பிறரைக் காத்தலைக் காண்கின்றோம். இத்தகைய பெரும் பண்பினைப் புலவர் ஒருவர், ஓரறிவு உயிர்ப் பொருளிடத்தும் கண்டு போற்றி மகிழ்கின்றார். கரும்புத்

---

1. ''பதிற்றுப்பத்து நூலும் இவ்வாறே வருதலின், பாடாண் திணையே ஆயிற்று.'' (தொல்காப்பியம், புறத்திணையியல், நூற்பா, 25, நச்சினார்க்கினியர் உரை.)
2. எட்டுத்தொகைச் செல்வம், பக்கம், 15.

தோட்டம் ஒன்று உள்ளது. அதனைச் சுற்றி, நெய்தல்கள், தழைத்துப் பூத்துப் பொலிவோடு விளங்குகின்றன. எருமைகள் சில, அக் கரும்பைத் தின்ன வருகின்றன. நெய்தல்கள், அவ் எருமைகளின் முன், தம் உயிரையும் பொருட்படுத்தாமல் நிற்கின்றன; மேலும், கரும்பினைத் தின்னுமல், தம்மை உணவாகக் கொள்ளுமாறு, அவ் எருமைகளைத் தடுக்கின்றன. பூத்த நெய்தலிடத்து அமைந்த இவ் அருஞ் செயலினைக் குமட்டூர்க் கண்ணனார்,

"கரும்பின் பாத்திப் பூத்த நெய்தல்
இருங்கண் எருமையின் நிரைதடுக் குநவும்"[1]

என்று பாடியுள்ளார். இச் சிறப்பினால், இச் செய்யுளிற்குப் 'பூத்த நெய்தல்' என்று பெயர் அமைந்தது, பொருத்தமே ஆகும். குமட்டூர்க் கண்ணனார் காட்டும் நெய்தலின் வாழ்வில், மன்னுயிர்க்காகத் தம் இன்னுயிரைக் கொடுக்கும் மேன்மக்களின் அருஞ் செயலைக் கண்டு களிக்கலாம்.

## பதிகங்கள்

இந் நூலில் உள்ள ஒவ்வொரு பத்தின் இறுதியிலும் ஒவ்வொரு பதிகம் உள்ளது. இப் பதிகங்கள், ஆசிரியப் பாவாகத் தொடங்கி, உரைநடையாக முடிகின்றன. இப் பதிகங்களை இயற்றியவர் இன்னார் என்பது, அறிய இயலவில்லை. செய்யுட்கள்

---

1. பதிற்றுப்பத்து, செய்யுள், 13.

மட்டும் உள்ள ஏடுகளில், இப் பதிகங்கள் காணப் படாமையினுல், தொகுப்பாசிரியருக்குப் பின் வந்த ஒருவரால், இவை, எழுதப்பட்டிருக்கலாம் என்பர். நச்சினர்க்கினியர், அடியார்க்கு நல்லார் ஆகிய உரையாசிரியர்களால், இப் பதிகங்கள் எடுத்தாளப் பெறுதலின், பதிகம் பாடிய புலவர், இவ் உரையாசிரியர்களுக்கு முற்பட்ட காலத்தவராதல் வேண்டும். சேர வேந்தர் வரலாற்றைச் செம்மையாக எழுதிவைத்தல் வேண்டும் என எண்ணிய ஒருவரால், இப் பதிகங்களும், அவற்றின் பின் உள்ள உரைநடைப் பகுதிகளும் எழுதப்பட்டிருத்தல் வேண்டும் என்று எண்ண இடம் உள்ளது. பதிற்றுப்பத்துச் செய்யுட்களில் உள்ள செய்திகளே அன்றி, அவற்றில் இல்லாத செய்திகளும் இப் பதிகங்களில் காணப்படுகின்றன. இந் நூலினைத் தொகுத்தவர், இப் பதிகங்களையும், உரைநடைப் பகுதிகளையும் இயற்றினர் என்பதும், கி.பி. பத்தாம் நூற்றுண்டிற்கு முன்பே, இவை இயற்றப் பெற்று, இப் பதிற்றுப்பத்தும் தொகுக்கப் பட்டிருத்தல் வேண்டும் என்பதும் டி.வி. சதாசிவப் பண்டாரத்தார் அவர்கள் கருத்தாகும். இப் பதிகப் பாடல்கள் இன்றேல், பதிற்றுப்பத்தின் வரலாற்றினையும், பெருமையினையும் அறிதல் இயலாது. பதிகம் என்னும் சொல், முகவுரை என்னும் பொருள் தரும். ஆயின், பதிற்றுப்பத்தின் முன்னுரையாக அமைய வேண்டிய பதிகங்கள், பின்னுரையாக அமைந்திருப்பதன் கருத்து, ஆராய்தற்கு உரியது.

இப் பதிகங்கள், சேர வேந்தர்தம் வெற்றிச் சிறப்பு, கொடைச் சிறப்பு, பிற சிறப்புக்கள், பாடினோர், பாடப்பட்டோர் பெயர்கள், செய்யுட்களின் பெயர்கள் ஆகியவற்றைக் கூறுகின்றன. பதிகங்களின் கீழ் உள்ள உரைநடைப் பகுதியினால், பத்துக்களைப் பாடிய புலவர்கள் பெற்ற பரிசில்கள் இவை என்பதும், பாட்டுக்களுக்கு உரிய வேந்தர்கள் அரசாட்சி செய்த ஆண்டுகள் இவ்வளவு என்பதும் அறியப்படுகின்றன. இப் பதிகங்களின் அமைப்பு, பிற்காலத்தில், கல்வெட்டுக்களில் காணப்படும் மெய்க்கீர்த்திகளுக்கு வழிகாட்டி ஆயிற்று என்று கூறலாம். இப் பதிகங்களில் காணப்படும் குடிவரவு, இப்போது சேர நாட்டில் உள்ள மருமக்கள் தாயத்திற்குச் சான்றாய் அமைந்தது என்றும், அவ்வாறன்று; மக்கள் தாயத்திற்குச் சான்றாய் அமைந்தது என்றும் ஆராய்சியாளர், இருவகைக் கொள்கை உடையவராவர். சுருங்கக் கூறின், இப் பதிகங்களும், இவற்றைச் சார்ந்துள்ள உரைநடைப் பகுதிகளும் வரலாற்று ஆராய்ச்சிக்குப் பெரிதும் பயன்படுவன எனலாம்.

இப் பத்துக்களைப் பாடிய புலவர் பெயர், பாடப்பெற்ற சேர வேந்தர் பெயர், பாடிப் பெற்ற பரிசில் ஆகியவை, பின் வருமாறு:—

| பத்தின் எண் | பாடிய புலவர் பெயர் | பாடப்பெற்றவர் பெயர் |
|---|---|---|
| இரண்டாம் பத்து | குமட்டூர்க் கண்ணனார் | இமயவரம்பன் நெடுஞ் சேரலாதன் |
| மூன்றும் பத்து | பாலைக் கௌதமனார் | பல்யானைச் செல்கெழு குட்டுவன் |
| நான்காம் பத்து | காப்பியாற்றுக் காப்பியனார் | களங்காய்க் கண்ணி நார் முடிச் சேரல் |
| ஐந்தாம் பத்து | பரணர் | கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன் |
| ஆறும் பத்து | காக்கை பாடினியார் நச்செள்ளையார் | ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் |
| ஏழாம் பத்து | கபிலர் | செல்வக் கடுங்கோ வாழியாதன் |
| எட்டாம் பத்து | அரிசில் கிழார் | தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை |
| ஒன்பதாம் பத்து | பெருங்குன்றூர் கிழார் | குடக்கோ இளஞ் சேரல் இரும் பொறை |

## பாடிப் பெற்ற பரிசில்

உம்பற்காட்டு ஐந்நூறு ஊர் பிரமதாயமும், 38 ஆண்டு தென்னாட்டு வருவாயில் பாகமும். (பிரமதாயம்—அந்தணர்க்குக் கொடுக்கப்படும் வரி இல்லாத நிலம்.)

பல்யானைச் செல்கெழு குட்டுவனை வேண்டி, அவரது பொருளால், ஒன்பது பெரு வேள்விகள் செய்வித்துப் பத்தாவது வேள்வி செய்கையில், தாமும், தம் மனைவியும் சுவர்க்கம் புகுதல்.

நாற்பது நூறுயிரம் பொன்னும், அரசர் ஆள்வதில் பாகமும்.

உம்பற்காட்டு வருவாயும், அரசர் மகன் குட்டுவன் சேரலும். (இவ் அரசர், தம் மகன், இப் புலவரிடம் கற்று வல்லனாதலை விரும்பி, அவனை, இப் புலவரிடம் அளித்தார் போலும்.)

அணிகலனுக்காக, ஒன்பது துலாம் பொன்னும், நூறுயிரம் பொற்காசும்.

நூறுயிரம் பொற்காசும், நன்று என்னும் குன்றின் மீது ஏறி நின்று, தம் கண்ணிற் கண்ட நாடு முழுதும்.

ஒன்பது நூறுயிரம் பொற்காசும், அரசு கட்டிலும். (இப் புலவர், அரசு கட்டிலை (அரியணையை) ஏற்றுக் கொள்ளாமல், அரசருக்கே அளித்துத் தாம் அமைச்சுரிமை மேற்கொண்டார்.)

முப்பத்தீராயிரம் பொற்காசும், ஊரும், மனையும், அருங்கல வெறுக்கையும், பிறவும்.

இப் பத்துக்களை இயற்றிய புலவர்களுள், பாலைக் கௌதமனார் பெற்ற பரிசிலைப் பற்றிய குறிப்புச் சிலப்பதிகாரத்தில் உள்ளது. பிறர் பெற்ற பரிசில்கள் பற்றியும் சான்றுகள் கிடைக்கலாம் என்பர்.[1] ஆயினும், மேற் கூறப்பட்டுள்ள பரிசில்களில், மிகுத்துக் கூறப்பட்டனவும் இருத்தல் கூடுமோ என்னும் ஐயப்பாடு தோன்றுகின்றது. அஃது எவ்வாறாயினும், இப் பரிசில்களை நோக்கும் போது, சேர வேந்தர்கள், தம்மைப் பாடிய புலவர்களுக்குப் பெரும் பரிசில்கள் வழங்கினர் என்பது உறுதியாகும்.

### வரலாற்று உண்மைகள்

பதிற்றுப்பத்துச் செய்யுட்களாலும், பதிகங்களாலும் அறியப்படும் வரலாற்று உண்மைகள், மிகப் பலவாம். சங்க காலத்தில், சேர வேந்தர்கள், உதியன் வழியினர், இரும்பொறை வழியினர் என, இரு மரபினராக வாழ்ந்தனர் என்பது தெரிகின்றது. இவ் இரு மரபினரும் சேர நாட்டினைத் தனித்தனிப் பகுதிகளில் இருந்து ஆட்சி செய்தனர் என்பர். பதிற்றுப்பத்தில், இப்போது கிடைத்துள்ள பத்துக்கள் எட்டிலும் பாடப் பெற்ற எண்மருள், இமய வரம்பன் நெடுஞ் சேரலாதன், பல்யானைச் செல்கெழு

1. பதிற்றுப்பத்து, ஔவை சு. துரைசாமிப் பிள்ளை அவர்கள் உரை நூலில், டி.வி. சதாசிவப் பண்டாரத்தார் அவர்கள் எழுதியுள்ள 'பதிற்றுப்பத்தும் பதிகங்களும்' என்னும் கட்டுரை, பக்கம், 47, 49.

குட்டுவன், களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல், கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன், ஆடுகோட் பாட்டுச் சேரலாதன் ஆகிய ஐவரும் உதியன் மரபி னைச் சேர்ந்தவராவார். செல்வக் கடுங்கோ வாழியா தன், தகடூர்[1] எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை, குடக்கோ இளஞ்சேரல் இரும்பொறை ஆகிய மூவரும் இரும்பொறை மரபினராவர். இப்போது கிடைக்காத முதல் பத்து, நெடுஞ்சேரலாதனின் தந்தையாகிய உதியஞ்சேரலின் மீதும், பத்தாம் பத்து, யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரல் இரும் பொறையின் மீதும் பாடப்பட்டனவாதல் வேண்டும் என்று கருதுகின்றனர்.[2]

மூன்றும் பத்தின் தலைவராகிய பல்யானைச் செல்கெழு குட்டுவன், இரண்டாம் பத்தின் தலைவரா கிய, இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனுக்குத் தம்பி யாவார். முறையே, நான்கு, ஐந்து, ஆறு ஆம் பத்துக் களின் தலைவர்களாகிய, களங்காய்க் கண்ணி நார் முடிச் சேரல், கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன், ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் ஆகிய மூவரும் நெடுஞ்சேரலாதனின் மக்களாவர். எட்டாம் பத்தின் தலைவராகிய தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்

1. தகடூர் என்பது, இப்போது தருமபுரி மாவட்டத்தின் தலைநகராக உள்ள தருமபுரி என்பர்.

2. பதிற்றுப்பத்து, ஔவை சு. துரைசாமிப் பிள்ளை அவர் கள் உரை நூலில், டி.வி. சதாசிவப் பண்டாரத்தார் அவர்கள் எழுதியுள்ள, 'பதிற்றுப்பத்தும் பதிகங் களும்' என்னும் கட்டுரை, பக்கம், 47.

பொறை, ஏழாம் பத்தின் தலைவராகிய செல்வக் கடுங்கோ வாழியாதனின் மகனவர். ஒன்பதாம் பத்தின் தலைவராகிய, குடக்கோ இளஞ்சேரல் இரும் பொறை, எட்டாம் பத்தின் தலைவராகிய தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறையின் மகனவர். எனவே, பதிற்றுப்பத்தில் காணப்படும் சேர வேந்தர்கள், ஒருவருக்கு ஒருவர் தமையன், தம்பி, தந்தை, மகன், பாட்டன், பேரன் ஆகிய நெருங்கிய உறவுத் தொடர்பு உடையவர்களாய் இருப்பது, அறிதற்குரியது.[1] ஆகவே, பதிற்றுப்பத்தில் உள்ள செய்யுட்கள், சங்க காலத்திற்குள், முன்னும் பின்னு மான பல்வேறு காலத்தில் வாழ்ந்த சேர வேந்தர் களைப் பற்றியனவாக இருப்பதும், அவை, கால முறைப்படி தொகுக்கப்பட்டிருப்பதும் நினைத்தற்கு உரியன.

இச் சேர வேந்தர்கள் அரசாட்சி செய்த சேர நாடு, இப்போது, கேரள நாடாக விளங்குகின்றது. இந் நாட்டின் வளமும், அரசர், மக்கள் ஆகியோர் வாழ்க்கை முறையும் பற்றிய செய்திகள், இந் நூலில் காணப்படுகின்றன. சேர வேந்தர்களைப் பற்றிய செய்யுட்கள், பிற தொகை நூல்களில் காணப்பட்டா லும் கால முறைப்படி, முழுதும் சேர வேந்தர்களைப் பற்றியதாக உள்ள நூலும், அச் சேர வேந்தர்கள்

1. பதிற்றுப்பத்து, ஔவை சு. துரைசாமிப் பிள்ளை அவர்கள் உரை நூலில், டி. வி. சதாசிவப் பண்டாரத்தார் அவர்கள் எழுதியுள்ள, 'பதிற்றுப்பத்தும் பதிகங் களும்' என்னும் கட்டுரை, பக்கம், 46—47.

ஒவ்வொருவரையும் குறித்து, ஒவ்வொருவரால் இயற்றப் பட்ட பத்துப் பத்துச் செய்யுட்கள் ஒருங்கு அமையப் பெற்ற நூலும் இப்பதிற்றுப்பத்து ஒன்றே யாகும். சுருங்கக் கூறினல், இந் நூலினைச் சேர வேந்தர்களின் வரலாற்று நூல் என்று கூறலாம்.

## வெற்றிச் சிறப்பு

சேர வேந்தரிடம், யானை குதிரை தேர் காலாள் என்னும் நால்வகைப் படைகளும் இருந்தன. அவர் களிடத்தில், சிறந்த கடற்படையும் இருந்தது. சேரர்களில், இமயவரம்பன் நெடுஞ் சேரலாதன் என்பவர், கடல் நடுவில் உள்ள தீவில் வாழ்ந்த தம் பகைவரது காவல் மரமாகிய கடம்பு மரத்தினை வெட்டி, அவர்களை வென்றமையும்,[1] பல்யானைச் செல்கெழு குட்டுவன் என்பவர், உம்பற்காடு என் னும் நாட்டினை வென்றமையும்,[2] அவர், அகப்பா என்னும் மதிலினை அழித்தமையும்,[3] களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல் என்பவர், நன்னனது காவல் மரமாகிய வாகை மரத்தினை வெட்டி வீழ்த்தி, அவனை வென்றமையும்[4] முதலிய பலவகை வீரச் செய்திகள், இந் நூலில் கூறப்பட்டுள்ளன. இந் நூலின் இரண்டாம் பத்திற்கு உரிய தலைவரான நெடுஞ் சேரலாதன் என்பவர், வடநாட்டு அரசர்களை

---

1. பதிற்றுப்பத்து, செய்யுள், 17, 20.
2. பதிற்றுப்பத்து, 3 ஆம் பத்து, பதிகம்.
3. பதிற்றுப்பத்து, 3 ஆம் பத்து, செய்யுள், 22, பதிகம்.
4. பதிற்றுப்பத்து, செய்யுள், 40.

வென்று, அவ்வெற்றிக்கு அறிகுறியாக, வடநாட்டின் எல்லையாகிய இமய மலையில், தமது விற்கொடி அடையாளத்தினை அமைத்தார். இச் சிறப்புக் கருதி, இமயவரம்பன் என்னும் பெயர், இவர் பெயருடன் சேர்க்கப் பெற்று, இமயவரம்பன் நெடுஞ் சேரலாதன் என, இவர், பெயர் வழங்கப் பட்டார். இதனால், சேர மன்னரது வெற்றிச் சிறப் பின் உயர்நிலை புலனாகும். கண்ணகியின் வடிவம் அமைத்தற்கு ஏற்ற கல் எடுப்பதற்குச் செங்குட்டு வன், வடநாட்டிற்குச் சென்ற செய்தி பற்றிய குறிப்பு, இந் நூலின் ஐந்தாம் பத்திற்கு உரிய பதிகத்தில், காணப்படுகின்றது. இச் செங்குட்டுவன், சிலப் பதிகாரத்தில் கூறப்படும் செங்குட்டுவன் என்பர். ஆயினும், இச் செய்தி, இப் பத்தில் உள்ள செய்யுட் களில், காணப்படாமையினால், இது, ஆராய்தற்கு உரியது.

## கொடைச் சிறப்பு

ஆடுகோட்பாட்டுச் சேரலாதன், என்பவர், தம் காதலியர் ஊடல் காரணமாகச் சீறி நோக்கும் பார் வைக்கு அஞ்சுதலைக் காட்டிலும் இரவலரின் வறு மைத் துன்பப் பார்வைக்கு மிக அஞ்சினார் என்பது, இந் நூலில்,[1] காணப்படுகின்றது. இதனால், காதல் வாழ்வினைக் காட்டிலும் ஈதல் வாழ்விற்குச் சேர வேந் தர்கள், முதல் இடம் கொடுத்தனர் என்பது விளங் கும். ஆடுகோட்பாட்டுச் சேரலாதனின் கொடை

---

1. பதிற்றுப்பத்து, செய்யுள், 57.

வளத்தினால், அவர் நாட்டில், இரவலர் இல்லாது ஒழிந்தனர். ஆயினும், அவர், மேலும் மேலும் இரவலருக்கு ஈந்து இன்பம் காண எண்ணினர். அதனால், பிற நாடுகளில் இருந்த இரவலர்களைத் தேரில் கொண்டு வந்து, அவர்களுக்கு வேண்டுவன கொடுத்து மகிழ்வெய்தினர் என்பது, இந் நூலில் உள்ளது.[1] இதனால், சேர மன்னர்களின் கொடை ஆர்வம் புலனாகும். செல்வக் கடுங்கோ வாழியாதன் என்னும் சேர வேந்தர், கற்றறிந்து வேள்விகள் முடித்த அந்தணர்களுக்குப் பெரும் அளவில் அருங் கலன்களை நீர்வார்த்துக் கொடுக்கும்போது, அந் நீர் மிகுதியினால், அரண்மனை முற்றம் சேறாகி, யானைகள், அங்கு நிற்றலை வெறுத்தன என்பது, இந் நூலில்[2] காணப்படுகின்றது. இதனால், சேர வேந்தர்களின் பெருங்கொடை வண்மையை அறியலாம். இவ்வாறும், பிறவாறும் சேர வேந்தர்களின் கொடைச் சிறப்புக்கள், இந் நூலில், பெரிதும் பாராட்டிக் கூறப்பட்டுள்ளன.

மேலும், இமயவரம்பன் நெடுஞ் சேரலாதனின் கைவண்மைக்கு அக்குரன்[3] என்னும் பெரு வள்ளலின் கைவண்மை, உவமையாக, இந் நூலில் கூறப்பட்டுள்ளது. இவ் அக்குரன் என்பார், காலத்தினால் முற்பட்டவர்கள் எனக் கருதப்படும் இடை எழு வள்ளல்களுள் ஒருவராகிய அக்குரன் என்று கருதுவர். இவர், துரியோதனன் முதலாய

1. பதிற்றுப்பத்து, செய்யுள், 55.
2. பதிற்றுப்பத்து, செய்யுள், 64.
3. பதிற்றுப்பத்து, செய்யுள், 14.

நூற்றுவருக்குப் போரில் துணைவலியாக இருந்தவர் என்ற குறிப்பு, இந் நூலில் காணப்படுவதனால், இவ் வள்ளலைக் கன்னன் என்று கருதலாம் என்பாரும் உண்டு.

**பிற பல செய்திகள்**

இந் நூலில், சேர வேந்தர்களைப் பற்றிய செய்திகள் அல்லாமல், குறுநில மன்னர் சிலரைப் பற்றிய வரலாறுகளும், அவர்களுடைய அரசாட்சி, வீரம், கொடை, அவர்கள் புலவர்களைப் போற்றிய சிறப்பு முதலியனவும் காணப்படுகின்றன.

நேரி மலை, அயிரை மலை, செருப்பு மலை முதலிய மலைகளைப் பற்றியும், பேரியாறு, வானியாறு, காவிரியாறு முதலிய ஆறுகளைப் பற்றியும் இந் நூலில், குறிப்புக்கள் உள்ளன. இவற்றுள், நேரி மலையையும், அயிரை மலையையும் பற்றிய குறிப்புக்கள், கபிலர் பாடிய ஏழாம் பத்தில் காணப்படுவதை நினைக்கும்போது, குறிஞ்சித் திணையைப் பற்றி, அகப் பொருட் செய்யுட்களை இயற்றுவதில் தலைசிறந்த கபிலர், புறப்பொருளைப் பற்றித் தாம் பாடும் போதும் குறிஞ்சித் திணைக்கு உரிய மலைகளை மறவாதிருக்கும் இயல்பு புலப்படுகின்றது.

வாகை மலரை வெற்றிக்கு அறிகுறியாகச் சூடுதல், தமிழ் மக்களின் தொன்றுதொட்டு வருகின்ற வழக்கமாகும். அதற்கு ஒரு விளக்கம் போல, வாகை மரத்தின் அடியில், வெற்றித் தெய்வம் இருக்கும் செய்தி[1] இந் நூலில், காணப்படுகின்றது.

---

1. பதிற்றுப்பத்து, செய்யுள், 66.

துணங்கை[1] என்னும் ஒரு வகைக் கூத்தினைப் பற்றிய குறிப்பு, இந் நூலில், பல இடங்களில் உள்ளது. இக் கூத்தினை அரசரும், வீரரும், மகளிரும், பேய்களும் பற்பல அமையங்களில் ஆடினர் என்பது தெரிகின்றது. மேலும், பிற தொகை நூல்களிலும், பத்துப்பாட்டிலும் இக் கூத்தினைப் பற்றிய குறிப்புக் காணப்படுவதனால், இக் கூத்து, அக் காலத்தில், மிகுதியாக வழக்கத்தில் இருந்தது என்பது தோன்றுகின்றது.

இரத்தம் என்னும் பொருள் உள்ள நெய்த்தோர் என்னும் சொல், இந் நூலில் உள்ளது. இச் சொல், தெலுங்கு மொழியிலும், கன்னட மொழியிலும் 'நெத்துரு' என, இப்போதும் வழக்கில் உள்ளது என்பர்.

'நெடுவழிகளில், இருபுறத்தும் பழ மரங்கள் இருந்தன. வழிச் செல்வோர், அப் பழங்களை உண்டு களைப்புத் தீர்ந்தனர்' என்னும் குறிப்பு, இந் நூலில் காணப்படுகின்றது. சாலை வழிகளில், அறத்திற்காகப் பழ மரங்களை வளர்த்தல், முற்கால வழக்கம் என்பது, இதனால் தெரிகின்றது. அசோக மன்னர், சாலைகளின் இருபுறத்தும், பழ மரங்கள் வைத்து வளர்க்கச் செய்தார் என்னும் செய்தி, அவரைப் பற்றிய கல்வெட்டில் இருப்பது, இங்கு நினைக்கத் தக்கது.

---

1. இதனைச் சிங்கிக் கூத்து என்றும் கூறுவர்.
2. பதிற்றுப்பத்து, செய்யுள், 60.

## அந்தாதி

இந் நூலில், நான்காம் பத்தில் உள்ள செய்யுட்கள் பத்தும் அந்தாதியாக அமைந்துள்ளன. ஐங்குறுநூற்றில், தொண்டிப்பத்தில் உள்ள செய்யுட்கள் பத்தும் அந்தாதி முறையில் அமைந்திருக்கும் செய்தி, முன்பு, ஐங்குறுநூறு பற்றிய பகுதியில்,[1] குறிப்பிடப்பட்டது.

வேறுவேருகிய பத்து வகைச் செய்யுட்களினுல் அமைந்த ஒரு வகை அந்தாதி நூலிற்குப் பதிற்றுப் பத்து அந்தாதி எனப் பிற்காலத்தினர் பெயரிட்டிருப்பது, இங்கு நினைக்கத் தக்கது.

---

1. எட்டுத்தொகைச் செல்வம், பக்கம், 94.

## 9. புறநானூறு

இந் நூலில், கடவுள் வாழ்த்துச் செய்யுள் உட்பட, நானூறு செய்யுட்கள் உள்ளன. இவற்றுள், பெரும்பாலானவை, ஆசிரியப் பாக்களாகவும், சில செய்யுட்கள், வஞ்சிப் பாக்களாகவும் காணப் படுகின்றன. புறப்பொருள் பற்றிய நானூறு செய்யுட்களைக் கொண்டமையினால், இந் நூல், புறநானூறு எனப் பெயர் பெற்றது. மேலும், இந்நூல், புறப்பாட்டு எனவும், புறம் எனவும், புறம்பு நானூறு எனவும் பெயர் வழங்கப் பெறும். இந்நூற் செய்யுட்களின் அடி எண் அளவினைக் கணக்கிட்டால், சிற்றெல்லை நான்கு அடிகளாகவும், பேரெல்லை நாற்பது அடிகளாகவும் உள்ளன. இந் நூலில், சில செய்யுட்கள், இடையிடையே சிதைந்து காணப்படுகின்றன. 244, 355 ஆம் செய்யுட்கள், குறைச் செய்யுட்களாக உள்ளன. 267, 268 ஆம் செய்யுட்கள் இரண்டும் கிடைக்கவில்லை. இந் நூல் அறநிலை, பொருள்நிலை, இன்பநிலை என்னும் மூன்று பகுதிகளாகப் பகுக்கப் பட்டிருத்தல் வேண்டும் என்று கருதுவோர் உள்ளனர்.[1]

---

1. புறநானூறு, டாக்டர், உ.வே. சாமிநாதையர் அவர்கள் பதிப்பு, முகவுரை, பக்கம், X.

## நூற்பொருள்

எட்டுத்தொகையுள், புறப்பொருள் பற்றிய நூல்கள், பதிற்றுப்பத்தும், புறநானூறும் என்பது, முன்பு கூறப்பட்டது. பதிற்றுப்பத்து, சேர வேந்தர்களைப் பற்றிக் கூறும் நூலாகும். புறநானூறு, தமிழ் நாட்டு முடியுடை வேந்தர்கள், குறுநிலத் தலைவர்கள், வள்ளல்கள், வீரர்கள், புலவர்கள் முதலிய பலருடைய வரலாறுகளைக் குறிப்பிடும் நூலாகும். இதனால், இந் நூலினைத் தமிழ் நாட்டு வரலாற்று நூல் என்று சொல்லலாம். இச் சிறப்பினை நோக்குங்கால், இந்நூல், பிற தொகை நூல்கள் ஏழினும் சிறந்தது என்பர். இந் நூலில், சில செய்யுட்கள், பாட்டுடைத் தலைவர் ஒருவரைப் பற்றியனவாக இல்லாமல், பொதுவான அறிவுரைகளையும், அறவுரைகளையும் கூறுவனவாக உள்ளன. சங்ககாலத் தமிழகம், தமிழகத்து அரசியல், போர் முறை, மகளிர் வீரம், கொடைப் பெருமை, கல்வி, கலை வளர்ச்சி, நாகரிகம் முதலிய செய்திகளை அறிவதற்கு இந்நூல், பெருந் துணை புரிகின்றது. இந்நூற் செய்யுட்களில் பாடப்பட்டோருள், முடியுடை வேந்தர்கள், ஐம்பதின்மருக்கு மேற்பட்டவர்களும், குறுநிலச் செல்வர்கள், எண்பதின்மருக்கு மேற்பட்டவர்களும் காணப்படுகின்றனர் என்பர்.

## பாடினோர்

இந்நூற் செய்யுட்களை இயற்றிய புலவர்கள், நூற்றைம்பதின்மருக்கு மேற்பட்டவராவர். இவர்களுள், பெண்பாற் புலவர்கள், பதினவர் உள்ளனர்.

பெண்பாற் புலவர்களுள் சிறந்து விளங்கிய ஔவை யாரே, இந்நூற் செய்யுட்களை இயற்றிய புலவர் களில், மிகுதியான செய்யுட்களை இயற்றியவர் ஆவர். இவர் இயற்றியனவாக, முப்பத்து மூன்று செய்யுட்கள், இந் நூலில் உள்ளன. இந் நூலில், கடவுள் வாழ்த்தினை அடுத்து முதலாவதாக உள்ள செய்யுளை இயற்றிய முரஞ்சியூர் முடிநாகராயர் என் பவர், தலைச்சங்கப் புலவர்களுள் ஒருவர் என, இறையனார் களவியல் உரையில் கூறப்பட்டுள்ளது.

**உரைகள்**

இந் நூலின் முதல் 266 செய்யுட்களுக்குப் பழைய உரை உள்ளது. இவ் உரையில், செய்யுட் களின் பொருள்கள், பொழிப்புரையாக எழுதப் பெற்றுள்ளன. மேலும், இவ் உரைக்கண், துறை, பொருள் நலம், சொல் முடிவு, இலக்கணக் குறிப்பு, ஆகியவை விளக்கப்பட்டுள்ளன. இவ் உரையாசி ரியர் இன்னார் என்பது தெரியவில்லை ஆயினும், இவர், சிலப்பதிகார உரையாசிரியராகிய அடி யார்க்கு நல்லாருக்கு முற்பட்டவர் என்று கருத இட மிருக்கிறது. இப் பழைய உரைக்கு முன்னும் ஓர் உரை, இந் நூலிற்கு இருந்தது என்பது, இவ் உரையில் எழுதப்பட்டுள்ள செய்திகள் சிலவற்றி னால் தெரிகின்றது. அவ் உரை, இப்போது கிடைக்க வில்லை.

டாக்டர், உ.வே சாமிநாதையர் அவர்கள், மேற் குறிப்பிட்ட பழைய உரையுடன், தம் குறிப்புரை யினையும், ஆராய்ச்சி முகவுரையினையும் சேர்த்து,

கி. பி. 1894 ஆம் ஆண்டில், இந் நூலினை வெளியிட்டார்கள். பின்பு, ஔவை சு. துரைசாமிப் பிள்ளை அவர்கள் எழுதிய விளக்கவுரை, இந் நூலின் முதல் இருநூறு செய்யுட்களுக்கு 1947 ஆம் ஆண்டிலும், பின் இருநூறு செய்யுட்களுக்கு 1951 ஆம் ஆண்டிலும் வெளிவந்துள்ளது.

எட்டுத்தொகை நூல்களின் உரைகள் பற்றி இதுவரை கூறப்பட்ட செய்திகளை நினைக்கும்போது, நற்றிணை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, புறநானூறு ஆகிய நூல்கள் நான்கிற்கும் ஔவை சு. துரைசாமிப் பிள்ளை அவர்கள் எழுதிய உரைகள், 1947 ஆம் ஆண்டு முதல், 1966 ஆம் ஆண்டிற்குள், வெளிவந்துள்ளன என்பது, அறியப்படும்.[1] மேலும், அகநானூறு, நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, பரிபாடல் ஆகிய நூல்கள் ஆறுக்கும் புலவர், பொ. வே. சோமசுந்தரனார் அவர்கள் எழுதிய உரைகள், 1952 ஆம் ஆண்டு முதல், 1970 ஆம் ஆண்டிற்குள், சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினால், வெளியிடப் பெற்றுள்ளன என்பதும் இங்கு நினைத்தற்குரியது.

---

1. முன்பு, நற்றிணை பற்றிய பகுதியில்(எட்டுத்தொகைச் செல்வம், பக்கம் 47.), நற்றிணையின் முதல் 200 செய்யுட்களுக்கு ஔவை சு. துரைசாமிப் பிள்ளை அவர்களின் விளக்கவுரை வெளிவந்துள்ளது என உள்ள செய்தி, நற்றிணை முழுதிற்கும் ஔவை சு. துரைசாமிப் பிள்ளை அவர்கள் எழுதிய விளக்கவுரை, இரு பகுதிகளாக வெளிவந்துள்ளது என இருத்தல் வேண்டும்.

மேலும், எட்டுத்தொகை நூல்களில் பலவற்றிற்குப் புலியூர்க் கேசிகன் அவர்கள் எழுதிய தெளிவுரைகளும், சிலவற்றிற்குச் சக்திதாசன் சுப்பிரமணியன் அவர்கள் எழுதிய விளக்கங்களும் வெளிவந்துள்ளன.[1]

## மொழி பெயர்ப்பு

மேலைநாட்டு அறிஞர் ஜி. யு. போப் அவர்கள், இந்நூற் செய்யுட்கள் சிலவற்றை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து வெளியிட்டுள்ளார்கள்.

## திணை, துறை முதலியன

இந்நூற் செய்யுட்களில், பெரும்பான்மையானவற்றின் பின், திணையும், துறையும், பாடப்பட்டோர் பெயரும், பாடினோர் பெயரும் காணப்படுகின்றன. சில செய்யுட்களின் பின், இவை, இன்றியும், இவை, சிதைந்தும் உள்ளன. நச்சினார்க்கினியர், இந்நூற் செய்யுட்கள் சிலவற்றைத் தொல்காப்பிய உரையில் மேற்கோள் காட்டும்போது, அவற்றிற்கு வேறு திணைகளும், துறைகளும் கூறியுள்ளார்.

## தொகுப்பு முறை

இந் நூலில், முதலில், முடிவேந்தர்கள் மீது பாடப் பெற்ற செய்யுட்களும், அவற்றின் பின், குறு

1. எட்டுத்தொகை நூல்களின் உரைகள், பதிப்புக்கள் முதலியவை பற்றி, மேலும் பல வகைச் செய்திகள், சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியர், டாக்டர், ந. சஞ்சீவி அவர்களின், சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணைகள் என்னும் நூலில் உள்ளன. இவ் வகையில் ஆராய்ச்சி செய்வோர்க்கு இந்நூல், சிறந்த துணை புரியும்.

நிலத் தலைவர்கள் மீது பாடப் பெற்ற செய்யுட்களும், அவற்றின் பின், பொதுவான அறிவுரைகளையும், அறவுரைகளையும் கூறும் செய்யுட்களும் தொகுக்கப் பட்டுள்ளன. பின்னர், இவ் வகைகளைச் சேர்ந்த செய்யுட்கள், கலந்துவர அமைக்கப்பட்டுள்ளன. முதலில் அமைந்த முடிவேந்தர்களைப் பற்றிய செய் யுட்களுள், கடவுள் வாழ்த்திற்கு அடுத்த இரண் டாம் செய்யுள் முதல், பதினாறும் செய்யுள் வரை உள்ள பதினைந்து செய்யுட்களில், முதல் செய்யுள், சேர வேந்தரையும், இரண்டாம் செய்யுள், பாண்டிய வேந்தரையும், மூன்றும் செய்யுள், சோழ வேந்த ரையும் பற்றியனவாக இருப்பது போலப் பதினைந் தாம் செய்யுள் வரை, மற்றைய செய்யுட்களும் இவ் வாறே, மாறி மாறி மூவேந்தரையும் பற்றியனவாக அமைய, முறைப்படுத்தி வைக்கப்பட்டுள்ளன. இதனை நோக்கும்போது, இந் நூலினைத் தொகுத் தவர், முடிவேந்தர்களைச் சேரர், பாண்டியர், சோழர் என்று கூறும் முறையினை மேற்கொண் டனர் என்பது புலப்படும். இம் முறைவைப்பிற்கு வித்திட்டவர், தொல்காப்பியனர் ஆவர். அவர், முடிவேந்தர்களுக்கு உரிய அடையாளப் பூக்களைப் பற்றிக் கூறும்போது,

"போந்தை வேம்பே ஆர்என வருஉம்
மாபெருந் தானையர் மலைந்த பூ"[1]

---

1. தொல்காப்பியம், பொருளதிகாரம், புறத்திணையியல், நூற்பா, 5. பனம் பூ, சேரர்களுக்கும், வேப்பம் பூ, பாண்டியர்களுக்கும், ஆத்திப் பூ, சோழர்களுக்கும் உரிய அடையாளப் பூக்களாகும். போந்தை-பனை. ஆர்-ஆத்தி.

எனக் குறிப்பிட்டுள்ளார். இதனல், தொல்காப்பியனுர் காலத்திலேயே, சேரர், பாண்டியர், சோழர் என்ற முறையில், மூவேந்தர்களைக் குறிப்பிடும் வழக்காறு உண்டு என்பது விளங்கும். இம் மரபு, புறநானூற்றினைத் தொகுத்தவரால், பின்பற்றப்பட்டுள்ளது.

## கல்வெட்டுக்களும், செப்பேடுகளும்

இந் நூலில் காணப்படும் செய்திகளுள் சில, பிற்காலக் கல்வெட்டுக்களாலும், செப்பேடுகளாலும் உறுதிப்படுகின்றன. சோழன் பெருநற்கிள்ளி, சோழன் கரிகாலன், சோழன் செங்கணன் என் போர், ஆனைமங்கலச் செப்பேடுகள், திருவாலங்காட்டுச் செப்பேடுகள், கன்னியாகுமரிக் கல்வெட்டுக்கள் ஆகியவற்றில், மிகச் சிறப்பாகக் குறிப்பிடப் பெற்றுள்ளனர். பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி, அரசர்களுக்கு உரிய வேள்விகள் பல செய்து சிறப்புற்றவர் என்பது, வேள்விக்குடிச் செப்பேட்டில் தெரிகின்றது. தலையாலங்கானத்தில், பாண்டியன் நெடுஞ்செழியன் போர் செய்து, எழுவரை வென்ற செய்தி, சின்னமனூர்ச் செப்பேட்டில் குறிக்கப்பட்டுள்ளது. வேள் பாரி இறந்த பின்னர், அவருடைய பெரு நண்பரான கபிலர், பாரியின் மகளிர் இருவரையும் விச்சிக்கோன், இருங்கோவேள் ஆகிய இருவரிடமும் அழைத்துச் சென்று, அவர்களை மணம் புரிந்து கொள்ளுமாறு, அவ் இருவரையும் வேண்டினர். அவர்கள் மறுக்கவே, அம் மகளிரைப் பார்ப்பார்ப்படுத்து அவர், வடக்

கிருந்து உயிர் நீத்தார் என்ற செய்தி, புறநானூற்றில் உள்ளது. இச் செய்தி, சிறிது வேறுபாட்டுடன், திருக்கோவலூர் வீரட்டானேசுவரர் திருக்கோயில் கல்வெட்டு ஒன்றில், காணப்படுகின்றது. இக் கல்வெட்டினையும், புறநானூற்றினையும் சேர்த்துப் பார்க்கும்போது, கபிலர், பாரி மகளிர் இருவருள், ஒரு மகளை மலையமானுக்குத் தாமே மணஞ் செய்து கொடுத்த பின்பு, மற்றொரு மகளைத் தமக்கு வேண்டிய பார்ப்பாரது பாதுகாவலில் வைத்துவிட்டு, உயிர் விட்டிருத்தல் வேண்டும் என்பது, உய்த்துணரப் படுகின்றது என்பர்.

## மன்னரும், மக்களும்

அக்காலத் தமிழ் மக்கள், நெல்லையும், நீரையும் உயிராகக் கருதவில்லை; மன்னரையே உயிர் என மதித்தார்கள். அரசர் இல்லாத நாட்டினை உயிர் இல்லாத உடல் எனக் கருதினார்கள். மன்னர்களும் தாம், மக்களின் உயிர் என்பதனை உணர்ந்து, அரசாட்சி நடத்தினார்கள். இதனை,

"நெல்லும் உயிர்அன்றே நீரும் உயிர்அன்றே
மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்
அதனால், யான்உயிர் என்பது அறிகை
வேல்மிகு தானை வேந்தற்குக் கடனே"[1]

என்னும் புறநானூற்றுச் செய்யுள் விளக்கும். இவ்வாறு, மன்னரும், மக்களும் உயிரும், உடலும் போல

1. புறநானூறு, செய்யுள், 186.

ஒன்றுபட்டு வாழ்ந்தமையினால், வழிவழியாக வரும் முடியாட்சி நடைபெற்றாலும், குடியாட்சியில் வாழ்வதைப் போல, மக்கள் இன்பமாக வாழ்ந்தார்கள்.

"அரசர், நீதி அறியாத அமைச்சர் சொல் கேட்டு, மக்களிடம் இரக்கம் காட்டாமல், மிகுதியாக, வரி வாங்கினால், அவ் அரசர், தாமும் நெடுங்காலம், வரிப் பொருள் பெற்றுப் பயன் அடைய மாட்டார். உலகமும் கெட்டு விடும்" என்று, புலவர் ஒருவர், அரசர் ஒருவருக்கு அறிவுரை கூறுவதாக, இந் நூலில் உள்ள செய்யுள்,[1] இங்கு நினைக்கத் தக்கது.

'மன்னர், தம்மைக் கொடுங்கோலர் என, மக்கள் பழி தூற்றுதற்கு அஞ்சி, அப் பழிச்சொல் இல்லாமல், நாட்டினை ஆளுதல் வேண்டும்' என்னும் கருத்துப் பாண்டியன் தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியன் இயற்றியதாக, இந் நூலில் உள்ள செய்யுளில்[2] உள்ளது. இவ்வாறு, ஓர் அரசரே கூறுவது, பாராட்டுதற்குரியது.

### மன்னரும், புலவரும்

புலவர்களைப் போற்றுவதில், அக்கால அரசர்களும், வள்ளல்களும் மிகுந்த விருப்பம் கொண்டிருந்தனர். புலவர்களால் பாடப் பெற்றவர்கள், இம்மை இன்பம் எய்துவதுடன், மறுமை இன்பமும் அடைவர் எனக் கருதினர்.[3] புலவர்கள், மிகுந்த

---

1. புறநானூறு, செய்யுள், 184.
2. புறநானூறு, செய்யுள், 72.
3. புறநானூறு, செய்யுள், 27.

மானத்துடன் வாழ்ந்தார்கள். தாங்க முடியாத வறுமைக் காலத்திலும் தம் மதிப்பை அவர்கள் இழக்கவில்லை. கொடையிலும், வீரத்திலும் சிறந்த மன்னர்களையே அவர்கள், புகழ்ந்து பாடினார்கள். பெருமை இல்லாத அரசர்களையும், இரவலர்க்கு ஈயாதவர்களையும் அவர்கள், பாட மறுத்தனர். இதனால், புலவர்களின் அஞ்சா நெஞ்சுரம் புலனாகும். இவ்வாறு, பாடுதலையே தொழிலாகக் கொண்டு, புலவர்கள் வாழவில்லை. அரசர்களுக்கு வேண்டிய அறிவுரைகளைக் கூறும் அமைச்சர்களாகவும், தூது செல்லும் அறிஞர்களாகவும் அவர்கள் விளங்கினார்கள். புலவர்கள், அரசர்களின் நம்பிக்கைக்கு உரியவர்களாக இருந்தார்கள். அரசர் இருவர் மனம் மாறுபட்டுப் போர் செய்ய முற்படும்போது, புலவர்கள், தாம் முன்னின்று போரைத் தடுத்து அமைதியை நிலைநாட்டினார்கள். இதனால், புலவர்கள், நாட்டுப் பணியில் நாட்டம் கொண்டிருந்தனர் என்பது விளங்கும்.

மன்னரும், புலவரும் மிகுந்த நட்புக் கொண்டு வாழ்ந்தனர். பாரி என்னும் குறுநில மன்னரும், கபிலர் என்னும் புலவரும் மிக நெருங்கிய நண்பர்கள் ஆவர். பாரி இறந்தவுடன், கபிலர், துன்பம் தாங்காமல், வடக்கிருந்து உயிர் துறந்த செய்தி, முன்பு கூறப்பட்டது. இவ்வாறே, கோப்பெருஞ் சோழன் என்னும் அரசர் இறந்தவுடன், அவருடன் நட்புக் கொண்டிருந்த பிசிராந்தையார் என்னும் புலவரும், உயிர் துறந்தார். இச் செய்திகளால்,

மன்னரும், புலவரும் கொண்டிருந்த நட்பின் பேரெல்லை விளங்கும்.

ஒளவையார் என்னும் பெண்பாற் புலவர், உண்டவரை நெடுங்காலம் நோயின்றி வாழச் செய்யும் நெல்லிக்கனி ஒன்றைப் பெற்ருர். அவர், அதனைத் தாம் உண்ணுமல், தம் மதிப்பிற்கு உரிய அதியமான் என்னும் மன்னரிடம் கொடுத்து, அவரை உண்ணச் செய்தார். இதனுல், தாம் வாழ்வதைக் காட்டிலும், மன்னர் நெடுங்காலம் வாழ்தல் வேண்டும் என விரும்பிய புலவரின் பேருள்ளத்தினை அறியலாம்.

இந் நூலில் உள்ள கையறுநிலை, முதுபாலை, ஆனந்தப் பையுள் என்னும் துறைகளுக்கு உரிய செய்யுட்கள், புலவர்கள், தம்மைச் சார்ந்தவர்களுக்காகவும், தம் புரவலர்களுக்காகவும் கண்ணீர் விட்டுப் பாடிய செய்யுட்களாக உள்ளன. இச் செய்யுட்களில், புலவர்களின் உள்ளங்கள், பிறர் துன்பத்திற்காகக் கலங்கி நெகிழ்ந்து உருகுதலைக் காணலாம். இத்தகைய செய்யுட்கள், ஆங்கில மொழியிலும் உண்டு. இந் நூலில் உள்ள இத்தகைய செய்யுட்களை விளக்கிப் புலவர் கண்ணீர் என்னும் பெயர் உடைய சிறந்த நூல் ஒன்றினைப் பேராசிரியர், டாக்டர் மு. வரதராசனுர் அவர்கள், எழுதியுள்ளார்கள்.

புலவர்கள்பால், நேர்மைப் பண்பு இருந்தது. ஒரு புலவர், மற்ருெரு புலவரைப் பாராட்டிப் பாடிய செய்யுட்கள், இந் நூலில் இருப்பது, இதற்குச் சான்ருகும்.

**கல்வியின் சிறப்பு**

தமிழ் மக்கள், கல்விக்குப் பெரிதும் மதிப்பளித்தனர். அரசர்களும் அறிவுடையவர்களையே விரும்பினர். ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் என்னும் பாண்டிய வேந்தர், கல்வி பற்றிக் கூறிய கருத்துக்கள்,[1] இங்கு நினைத்தற்கு உரியன. "தாய், தான் பெற்ற மக்கள் பலருள்ளும் கல்வியிற் சிறந்தவனையே விரும்புவாள்; ஒரு குடியில் பிறந்த பலருள்ளும் அறிவுடையோர் சொல்லிய வழியே, அரசரும் செல்வார். வேறுபாடு உடைய நான்கு குலத்தினுள்ளும் கீழ்க்குலத்தில் உள்ள ஒருவர் கற்ருல், மேற்குலத்தவரும், இவர் கீழ்க் குலத்தவர் என்று பாராமல், கல்வியின் பொருட்டு அவரை வழிபடுவார். இவை போன்ற சிறப்புக்கள், கல்விக்கு இருப்பதனுல், ஒருவர், தம் ஆசிரியருக்கு ஏதேனும் இடுக்கண் நேர்ந்தால், அதனைத் தீர்ப்பதற்கு விரைந்து உதவி செய்தும், பொருள் முட்டுப் பாட்டினுல் ஆசிரியர் வருந்துவாராயின், அவ் வருத்தம் தீர, மிகுந்த பொருளினை அவருக்குக் கொடுத்தும், அவர் மனம் மகிழும்படி வெறுப்பு இன்றி அவருக்கு வழிபாடு செய்தும் கற்றுக் கொள்ளுதல் நன்று" என்பன, அக்கருத்துக்களாம். இவ்வாறு, ஓர் அரசரே, கல்வியின் இன்றியமையாமையினை நன்கு அறிந்து, அதனைச் செய்யுளாக இயற்றினுர் எனில், கல்வியின் சிறப்பினைக் கூறவும் வேண்டுமோ?

---

1. புறநானூறு, செய்யுள், 183.

### சமயப் பொதுமை

அக்காலத் தமிழகம், சமயப் பொதுமை கொண்டு விளங்கியது. தமிழ் மக்கள், சிவபெருமான், செவ்வேள், பலராமன், கண்ணன், இந்திரன் முதலான பல்வேறு கடவுளரை வழிபட்டு வந்தனர். ஆயினும், கடவுட் கொள்கை காரணமாக, அவர்கள், தம்முள் மாறுபாடு கொள்ளவில்லை.

### போர் முறை

இந்நூல், புறப்பொருள் பற்றிய நூல் ஆதலால், அக்கால அரசியல் அமைப்பின் பல்வேறு அடிப் படைப் பண்புகளை, இந் நூலில் அறியலாம். அப் பண்புகளில், போர் முறை, சிறப்பாகக் குறிப்பிடத் தக்கது. தமிழ் மக்கள், எதனையும் அறத்தொடு பொருந்தச் செய்தல் வேண்டும் என்ற உள்ளம் படைத்தவர்கள் ஆதலால், போர் செய்வதிலும் அற நெறியைப் பின்பற்றினர். ஒரு நாட்டின் மீது படையெடுக்க விரும்பும் அரசர், காக்கப்பெற வேண்டிய ஆனிரைகளையும், அந்தணரையும், பெண்டிரையும், பிணியாளரையும், பிள்ளைகளைப் பெறுதவரையும் அப் புறப்படுத்தல் கருதிப் பறை அறைவிப்பார்.[1] பின்பே, போர் தொடங்கப்பெறும். இதனால், போர் செய்தற்கு உரியர் அல்லாதார் யார் என்பதனை வரையறைப்படுத்தி இருந்தனர் என்பதும், போரும் நினைத்தவுடன் தொடங்கப் பெறுவதில்லை; முன் அறிவிப்புச் செய்த பின்பே, தொடங்கப் பெற்றது என்

1. புறநானூறு, செய்யுள், 9.

பதும் அறியப்படும். போர்க் காலத்தில், யானைப் படை, குதிரைப்படை, தேர்ப்படை, காலாட்படை ஆகிய நால்வகைப் படைகளும் பயன்படுத்தப் பட்டன. வாள், வில், ஈட்டி, வேல், உலக்கை முத லியவை, போர்க் கருவிகளாக இருந்தன. போரில் வென்றவர்கள், தோற்றவர்களைக் கைப்பற்றிக் கொண்டு வந்தார்கள்; பகைவருடைய ஊரைத் தீயிட்டுக்கொளுத்தினார்கள்; பகைவருடைய நாட்டி லிருந்து கொண்டு வந்த பொருள்களை இரவலர் களுக்கு வழங்கினார்கள்; போர் வீரர்கள், தம் நாட்டின் உயர்வுக்காகத் தம் உயிரையும் கொடுக்கத் துணிந்தார்கள். அக்காலப் போர்கள், நாடு கொள்ளும் நோக்கத்துடன் மட்டும் நடைபெற வில்லை; ஓர் அரசரின் படைவலி, செங்கோல், ஆணை இவற்றை ஏனைய அரசரும் ஏற்றுக் கொண்டு, எல்லா நாடுகளும் அவருக்கு அடங்கியிருத்தல் வேண்டும் என்ற பெருமித நோக்கம் காரணமாகவும் நடைபெற்றன.

'என் பகைவரை நான் வெற்றி கொள்ளே னாயின், இன்ன இழி நிலையை அடைவேன்' என்று, அரசர்கள், வஞ்சினம் கூறும் பகுதிகள் சில,[1] இந் நூலில் உள்ளன. இவை, அரசர்களின் வீரம் செறிந்த மனத் திட்பத்தினைக் காட்டுவனவாகும்.

### மகளிர் வீரம்

ஒவ்வொருவருக்கும் உரிய கடமையைப் பற்றிப் பொன்முடியார் என்னும் புலவர் கூறியுள்ளார்.

1. புறநானூறு, செய்யுள், 71, 72, 73.

வீரக்குடி மகள் ஒருத்தி கூறுவதாக, அமைந்த இச் செய்யுளின் கருத்துப் பின் வருமாறு உள்ளது. "மகனைப் பெற்று வளர்த்தல், என் கடமை. அவனை நற்பண்புகளால் நிறைந்தவன் ஆக்குதல், அவனுடைய தந்தையின் கடமை. அவனுக்கு வேல் முதலிய கருவிகளை ஆக்கிக் கொடுத்தல், கொல்லனின் கடமை. அவனுக்கு நல்லொழுக்கத்தினைக் கற்பித்தல், நாடாளும் வேந்தரின் கடமை. இத்தனை வாய்ப்பும் பெற்ற அவனது கடமை, போர்க் களத்தில் போரிட்டு யானைகளைக் கொன்று, வெற்றியுடன் திரும்புதலாகும்."[1] இச் செய்யுளினால், ஒவ்வொருவரும் போர் வீரராக இருத்தல் வேண்டும் எனக் கருதப் பெற்றமை, அறியப்படும். தமிழ் மக்கள் இனம் எவ்வாறு அமைதல் வேண்டும் என, அக் காலத்தில் கருதப்பட்டது என்பதும் இச் செய்யுளினால் விளங்கும். தாய் ஒருத்தியினிடம் சென்று, 'உன் மகன் எங்கே?' என்று ஒருவர் கேட்டபோது, அவள், "புலி கிடந்து போன குகை போல, அவனைப் பெற்ற வயிறு இது; அவன், போர்க் களத்திலே காணப்படுவான்."[2] என்று மறுமொழி கூறினாள். இவற்றிலிருந்து தமிழ் மகளிர், வீர மகனைப் பெறுவதிலும், தம் மகன் போருக்குச் செல்வதிலும் எவ்வளவு பெருமை கொண்டனர் என்பதனை அறியலாம். இதனால், அவர்களின் உயர்ந்த நோக்கமும், அவர்களுக்கு நாட்டின் மீது இருந்த பற்றும் விளங்கும்.

---

1. புறநானூறு, செய்யுள், 312.
2. புறநானூறு, செய்யுள், 86.

**பழக்க வழக்கங்கள்**

அக்காலத் தமிழ் மக்கள், பொன், மணி, முத்து, பவழம் முதலிய பொருள்களைக் கொண்டு செய்யப் பெற்ற விலை உயர்ந்த அணி வகைகளை அணிந்தனர். பருத்தி நூலால் இயன்ற நல்ல ஆடைகளை உடுத்தனர்; மென்மையும், செறிவும், பூ வேலைப்பாடும் மிக்க ஆடைகள், அக்காலத்தில் இருந்தன. அரசர்களின் அரண்மனைகள், நெடு மாடமும், பல கட்டுக்களும், நிலா முற்றமும், வலிய அரணும் பெற்று விளங்கின. அரண்களில், காவலரே அன்றிப் பல வகை எந்திரப் பொறிகளும் இருந்தன. அணிகள் செய்யவும், ஆடைகள் நெய்யவும், கட்டிடங்கள் கட்டவும் மிக வல்லவர்கள் இருந்தார்கள். நுண் கலைகள், அக்கால மக்களால், பெரிதும் விரும்பப் பெற்றன. அரசர்கள், அவற்றிற்கு ஆக்கம் அளித்தனர். அக்காலத்தில், பாட்டுக்களுக்குப் பண்கள் வகுக்கப் பெற்றிருந்ததுடன், அவற்றைப் பாடுதற்குரிய காலங்களும் வரையறுக்கப் பட்டிருந்தன. இசை வல்ல பாணர்களுக்கும், பாடினியருக்கும் அரசர்கள், பரிசில்கள் வழங்கினர். நாள் பார்த்தல், புள் நிமித்தம் காணுதல், தீய நிமித்தங்கள் அறிதல் முதலிய பழக்கங்கள், அக்கால மக்களிடம் இருந்தன. பண்டமாற்று முறையில், வாணிகம் நடைபெற்றது. கடல் கடந்து வெளிநாடுகளுக்கும் சென்று வாணிகம் செய்தனர். உழவுத் தொழில், உயர்ந்த தொழிலாகக் கருதப்பட்டது.

**உயர்ந்த உள்ளம்**

'எல்லா ஊரும் நம் ஊர்; யாவரும் நம் சுற்றத்தினர். ஒருவர்க்கு நன்மையும், தீமையும் பிறரால் வருவன அல்ல; அவரவர் செய்த நல்வினை தீவினைகளால் வருவன' என்னும் பரந்த உள்ளம், தமிழ் மக்களிடம் இருந்தது.[1] நல்வினையைச் செய்ய இயலாவிட்டாலும் தீவினையைச் செய்யாமல் இருத்தல் நன்று என, அவர்கள், எண்ணினார்கள்.[2] அவர்கள், புகழுக்காக உயிரையும் கொடுக்கத் துணிந்தனர். பழியென்றால், அதனால், உலகம் முழுதும் கிடைத்தாலும் ஏற்க மறுத்தனர். தமக்கெனு வாழாமல், பிறர்க்கென வாழும் சான்றோர்கள் இருத்தலினாலேயே, இவ் உலகம், அழியாமல் இருக்கின்றது,[3] என்பது, அவர்கள், கொள்கை. இத்தகைய உயர்ந்த கருத்துக்கள் பலவற்றை, இந் நூலில் காணலாம்.

'வள்ளல்கள், தாம் இப் பிறப்பிற் செய்தது, தமக்கு மறுபிறப்பிற்கு உதவும் எனக் கருதிப் பொருளை விலையாகக் கொடுத்து, அதற்கு ஈடாக அறத்தைப் பெறும் வாணிக முறையினை மேற்கொள்ளவில்லை; சான்றோர்கள் சென்ற வழி என்று கருதியே, வள்ளன்மையினை, அவர்கள் மேற்கொண்டனர்'[4] என்று, உறையூர் ஏணிச்சேரி முடமோசியார்

1. புறநானூறு, செய்யுள், 192.
2. புறநானூறு, செய்யுள், 195.
3. புறநானூறு, செய்யுள், 182.
4. புறநானூறு, செய்யுள், 134.

என்னும் புலவர் கூறியிருப்பது, உயர்ந்த வண்மைக்கு ஓர் இலக்கணமாக உள்ளது.

மதுரை நக்கீரனார் என்னும் புலவர், பிடவூர் கிழான் மகன் பெருஞ்சாத்தன் என்னும் வள்ளலைக் காணச் சென்றார். அப்போது, பெருஞ்சாத்தன், நக்கீரனாரை வரவேற்றுச் சிறப்பித்தார். மேலும், பெருஞ்சாத்தன், தம் மனைவியினிடம் நக்கீரனாரைக் காட்டி, "என்னைப் பேணுவது போல, நல் உணவு தந்து, இவரைப் பேணுக" என்று கூறினார். அதனைக் கண்டு வியப்புற்ற புலவர், "அவனை மறவேன் ஆயினேன். அவனை நினைத்த நெஞ்சத்தினால், பிறரை நினையேன் ஆயினேன்" என்று உளம் நெகிழ்ந்து உரைத்தார்.[1] இதனால், தமிழ் மக்களது விருந்தோம்பற் பண்பாட்டின் உயர்ந்த தன்மை, இனிது விளங்கும்.

### சீரிய வாழ்க்கை

பிசிராந்தையார் என்னும் புலவர், நெடுங்காலம் வாழ்ந்துவந்தார். ஆயினும், அவரது தலை நரைக்கவில்லை. இதன் காரணத்தினை அறிய விரும்பிய சான்றோர்கள், அவரை அணுகிக் கேட்டனர். அப்புலவர், அவர்களைப் பார்த்து, "மாட்சிமைப்பட்ட குணங்களையுடைய என் மனைவியுடன், மக்களும் அறிவு நிரம்பியவர்; என் ஏவலர், யான் கருதிய தனையே கருதுவர்; யான் இருக்கின்ற ஊரில், நற்குணங்களால் அமைந்து, பணிய வேண்டும் உயர்ந்

1. புறநானூறு, செய்யுள், 395.

தோரிடத்துப் பணிந்து, ஐம்புலனும் அடக்கிய சான்றோர் பலர் வாழ்கின்றனர்; எனது நாட்டினை ஆளும் வேந்தர், முறை அல்லாதன செய்யாராய்க் காக்கின்றார்." இவையே காரணமாகும் என்று கூறினார். இக் கருத்து அமைந்த செய்யுள், இந் நூலில் உள்ளது.[1] இதனால் அறியப்படும் உண்மை யாது? 'வீட்டில் இன்பம் நிலவ, மனைவியும், மக்களும், ஏவலரும் தலைவர் கருத்து அறிந்து நடத்தல் வேண்டும். ஊரில் நன்மக்கள் மிகுதியாக இருப்பின், அவ் ஊரில் உள்ளார், நல்வழியிற் செல்வர். நாடாளும் வேந்தர் செங்கோலராயின்,அவரது ஆட்சியில், குடிமக்கள், இன்பத்தினையே பெறுவர். எனவே, வீடு, ஊர், நாடு என்னும் மூன்றும் செம்மையாக இருப்பின், மக்கள், கவலையற்ற வாழ்வு வாழ முடியும்' என்பதே, பிசிராந்தையார் கூறியதன் திரண்ட பொருளாகும். இத்தகைய உயர்ந்த வாழ்வினைப் பெற்றவர், பெரும் பேறு பெற்றவராவர்.

இதுவரை, எட்டுத்தொகை நூல்கள் பற்றிய செய்திகளும், எட்டுத்தொகை நூல்களில் உள்ள செய்திகளும் ஓரளவு கூறப் பெற்றன.

அகப்பொருள், புறப்பொருள் ஆகிய இரு வகைப் பொருளிலும் மக்களின் வாழ்க்கை முறைகள் அனைத்தும் அடங்கும். சங்க காலத்து அகப்பொருட் செய்யுட்கள், பிற்காலச் செய்யுட்கள் போலக் காதலர்களின் உடல் அழகை மிகுதியாகப் புனைந்துரைப்பன அல்ல. அவர்களின் உள்ளத்து உணர்ச்சி

---

1. புறநானூறு, செய்யுள், 191.

களையும், பண்பு நலன்களையுமே, பெரும்பாலும் புனைந்துரைப்பனவாகும். புறப்பொருட் செய்யுட்களில், அவற்றை இயற்றிய புலவர்களின் உணர்ச்சிகள், பெரும்பாலும் அப் புலவர்களே கூறுவனவாக வெளிப்படுகின்றன. அகப்பொருட் செய்யுட்களில், அவற்றை இயற்றிய புலவர்களின் உணர்ச்சிகள், உள் நின்று, தலைவன், தலைவி முதலாயினோர் கூறுவனவாக வெளிப்படுகின்றன.

பண்டைத் தமிழ் மக்களின் முதிர்ந்து உயர்ந்த பண்பாடுகள், அகப்பொருட் செய்யுட்களில், அன்பின் அடிப்படையிலும், புறப்பொருட் செய்யுட்களில், வீரம், வண்மை, அறிவுரை முதலியவற்றின் அடிப்படையிலும் ஒளிவிடுகின்றன. இப் பண்பாடுகளே, செய்யுட்களை இயற்றுதற்குப் புலவர் பெருமக்களைத் தூண்டின என்று கூறலாம்.

---

